# (1) சார்லி ஹெப்டோ – அரசின்மைவாதத்தின் சிரிப்பு

ஜெ சார்,

“சார்லி ஹெப்டோ” தாக்குதல் நடந்தபோது, லூசி பாரீஸ் ஏர்போர்ட்டில்; கிறிஸ்துமஸ் விடுமுறை முடிந்து கென்யா திரும்புவதற்காக, புறப்பாடில் check-in முடிந்து காத்திருந்ததாக சொன்னார்.

ஏர்போர்ட்டும், விரைவாக பாதுகாப்பு அதிகரிக்கப்பட்டு பரபரப்படைந்திருக்கிறது.

லூசி கென்யாவில் ஒரு Rose Breeding கம்பெனியில் வேலை செய்கிறார். அந்நிறுவனம், எங்களிடம் 2500 square meters Greenhouse வாடகைக்கு எடுத்திருக்கிறது. இரண்டு வாரங்களுக்கொருமுறை மேற்பார்வையிட வருவார்.

இம்முறை வந்தபோது, வருத்தம் தெரிவித்துவிட்டு, பத்து நிமிடம் பேசிக்கொண்டிருந்தேன். சில விஷயங்கள் ஆச்சரியமாயிருந்தது.

ப்ரான்ஸில் முஸ்லிம் மக்கள்தொகை எவ்வளவு இருக்கும் என்று கேட்டதற்கு, அங்கு மதவாரி கணக்கெடுப்பு அரசு நடத்துவதில்லை என்றார். மற்றவரிடம் மதம் கேட்பது குற்றமாகும் என்றும், யாரேனும் உங்களிடம் மதம் கேட்டால், நீங்கள் அவர்மேல் கோர்ட்டில் வழக்கு தொடரலாமென்றும் சொன்னார்.

வேண்டுமென்றேதான் கேட்டேன் – “லூசி, இந்த சம்பவத்திற்குப் பின், அரசு யோசிக்கிறதா, கணக்கெடுப்பு அவசியம் என்று?; மக்கள் இஸ்லாம் மதத்தின் மேல் அவநம்பிக்கை கொள்கிறார்களா?”.

உடனே மறுத்தார். “இல்லை. இஸ்லாம் மதத்திற்கும் இவர்களுக்கும் சம்பந்தமில்லை. இவர்கள் தலையில் மறை கழன்ற குழுக்கள்”

பாரீஸ் பேரணியைப் பற்றி பெருமையாக சொன்னார்.

**வெங்கடேஷ்**

அன்புள்ள வெங்கடேஷ்

இணையத்தில் சார்லி ஹெப்டோ பற்றி தாறுமாறாக எழுதப்படுவதை வாசித்து ஒருமாதிரி சுஸ்த் ஆகி இருக்கும் நிலை. ஆகவே அதிகம் பேச முடியவில்லை

ஐரோப்பியநாடுகள் நம்மைப்போன்றவை அல்ல. அவை நவீன ஜனநாயகம், மதச்சார்பின்மை, பேச்சுரிமை ஆகியவற்றுக்கு வந்துசேர்வதற்காக நூறாண்டுகளுக்கும் மேல் குருதி சிந்தியவை. அவ்விழுமியங்களின் வல்லமையும் மதிப்பும் அவர்களுக்குத் தெரியும்

இருநூறாண்டுக்கால ஜனநாயகப் பரிசோதனையின் உச்சமே ஐரோப்பாவின் பண்பாட்டுக்கொடை என்று சொல்லலாம். ஐரோப்பாவின் வணிக நோக்குள்ள, கருத்தியல் மேலாதிக்க நோக்குள்ள அரசியலை அதனுடன் ஒருபோதும் கலந்துகொள்ளக் கூடாது.பலர் செய்வது இதைத்தான்

உண்மையில் இரண்டு ஐரோப்பாக்கள் உள்ளன. ஆதிக்க ஐரோப்பாவை எதிர்க்கையிலேயே நவீன ஜனநாயகத்தின் மடித்தொட்டிலான ஐரோப்பாவை நாம் மதித்தாகவேண்டும். அவை ஒன்றை ஒன்று எதிர்ப்பவை. ஜனநாயக ஐரோப்பா உருவாக்கி அளிக்கும் சிந்தனைகளைக் கொண்டுதான் நாம் ஆதிக்க ஐரோப்பாவை இன்றும் எதிர்கொண்டபடி இருக்கிறோம்

இன்றைய உலகுக்கு ஜனநாயக ஐரோப்பாவே முதன்மையான முன்னுதாரணம் என்பதே என் எண்ணம். இன்றும் நாம் வழிபடும் எழுத்தாளார்களும் சிந்தனையாளர்களும் அங்கிருந்தே வருகிறார்கள். நாம் அவர்களுடன் முரண்படலாம். எதிர்க்கலாம். அவர்களின் முன்முடிவுகளை எதிர்கொள்ளலாம். ஆனால் அவர்களே நம் முன்னோடிகள்.

அந்த முன்னேறிய ஜனநாயகப்போக்கில் பல தளங்கள் உண்டு. அதில் இரு அம்சங்கள் நமக்கு இன்னமும் கூட பிடிபடாதவை. ஒன்று உச்சகட்ட தனிமனிதவாதம். இரண்டு , அரசின்மைவாதம். நாம் அங்கே சென்றுசேர இன்னும்கூட ஒரு நூற்றாண்டு ஆகலாம். [போகிற் போக்கைப்பார்த்தால் அதுவே சந்தேகமாக இருக்கிறது]

தனிமனிதசுதந்திரம் என்ற நோக்கின் உச்சமே அரசின்மைவாதம் என்று சொல்லலாம். ஒவ்வொரு தனிமனிதனுக்கும் தன் இன்பவிழைவை அடையவும், தன் அறிவுநாட்டத்தை நிறைவேற்றவும், ஆன்மீகமுழுமை பெறவும் முழுமையான உரிமை உள்ளது என்பது முதல் கொள்கை.

அப்படி தனிமனிதன் முழுமையடையத் தடையாக இருப்பவை அவனை சாதி, மதம், இனம், மொழி, பண்பாடு, ஒழுக்கம்,அரசாங்கம் என்றெல்லாம் அடையாளப்படுத்தும் அமைப்புகள். அவை தேவையான அளவுக்கு இருந்தாகவேண்டும். இல்லையேல் தனிமனிதனே பாதுகாப்பற்றவன் ஆகிவிடுவான். ஆனால் அவை நிகரான வல்லமைகளால் தடுக்கப்பட்டு கட்டுப்படுத்தப்படாவிட்டால் தனிமனிதன் சுதந்திரமாக இருக்கமுடியாது

ஆகவேதான் அங்கே அராஜக சிந்தனைகள் [Anarchism ] வலுவாக உள்ளன. [அராஜகம் என்ற சொல்லை நான் அரசின்மைவாதம் என்று மொழியாக்கம் செய்வேன். அராஜகம் என்பது பேச்சுவழக்கில் அழிவுத்தன்மை கொண்டது என்னும் எதிர்மறைப்பொருளில் பயன்படுத்தப்படுவது என்பதனால்]

அரசின்மைவாதம் என்பது மிகப்புனிதமான ஓர் மனநிலை. நிறுவப்பட்ட அனைத்தையும் எதிர்க்கும் ஒரு நிலை அது. கட்டமைக்கப்பட்ட அனைத்தையும் துறக்கும் நிலை. அது அனைவருக்கும் சாத்தியமல்ல. அரசின்மைவாதி என்ற பாவனை மேற்கொள்பவர்களை நிறையவே காணமுடியும். ஆனால் அவர்களின் நம்பிக்கைகள் புண்பட்டால் அவர்களின் அரசின்மைநிலை மாறும்.

[உதாரணம், ஈவேரா அவர்களின் பக்தர்கள். அவர்கள் அவரை அரசின்மைவாதி என்பார்கள். தங்களையும் அப்படிச் சொல்லிக்கொள்வார்கள். ராமனுக்கு செருப்புமாலை அணிவிப்பார்கள். ஆனால் ஈவேராவை ஒரு மதவெறியன் செருப்பால் அடிப்பேன் என்று சொன்னால் கொதித்துக்கிளம்பிவிடுவார்கள். இவர்கள் இன்னொருவகை மதவாதிகள். இன்னொரு சாமியை கும்பிடுகிறார்கள், அவ்வளவுதான்]

உண்மையான அரசின்மைவாதி என்பவன் அனைத்தையும் விமர்சிப்பவன். அனைத்தையும் என்பதை மும்முறை அடிக்கோடிடவும். அதன் மொழி என்பது எப்போதும் எள்ளல்தான். பிறரை எள்ளிநகையாடுபவன் தன்னையும் எள்ளிநகையாட அனுமதிப்பான். புனிதமான அனைத்தையும் கவிழ்ப்பான். அதிர்ச்சியடையச் செய்வான். [நமக்கு இங்கே சார்லி ஹெப்டோவின் பல கார்ட்டூன்கள் ஆபாசமாகத் தெரிவதற்கான காரணம் அங்கே அதிர்ச்சியின் எல்லை நமது தலைக்கு வெகுவாக மேலே உள்ளது என்பதுதான்]

எந்தக் கட்டுப்பாடுகளும், எல்லைகளும் இல்லாத எள்ளலே அரசின்மைவாதமாக இருக்கமுடியும். ஏனென்றால் கட்டுப்பபாடு என்றாலோ எல்லை என்றாலோ அதை விதிக்கும் ஒரு நெறியோ அமைப்போ அவசியமாகிறது. அதை ஏற்றுக்கொண்டதுமே அரசின்மைவாதம் காலியாகிவிடுகிறது. அந்த உரிமையை முன்னேறிய ஜனநாயக நாடுகள் அனுமதிக்கின்றன. பாதுகாக்கின்றன.

ஜனநாயகப் பண்பாட்டின் தவிர்க்கமுடியாத ஓர் உச்சம் அது. நமக்கு இன்னும் அது அறிமுகமாகவில்லை. இந்திய அரசியல் சட்டமே நமக்கு அதை அனுமதிக்கவில்லை.நாம் இன்னமும் ஜனநாயகமாக உருத்திரளாதவர்கள். இங்கே தனிமனிதர்கள் மிகமிகக்குறைவு. பெருந்திரள் மனநிலையே நம்மை ஆள்கிறது. ஆகவே இங்கே நவீன அரசின்மைவாதம் இப்போதைக்கு சாத்தியமும் அல்ல.

ஆகவேதான் நாம் அரசின்மைவாதியிடம் போய் 'அடிப்படை நாகரீகம்' பேணவேண்டும் என்று உபதேசம் செய்கிறோம். இடக்கரடக்கல்களை கோருகிறோம். சமூக அமைதிக்குப் பங்கம் விளைவிக்கக்கூடாது என்கிறோம். அதையெல்லாம் செய்தால் அவர்கள் அரசின்மைவாதிகளே அல்ல என்ற எளிய விஷயமே நமக்குப்புரிவதில்லை.

நான் மதிக்கும் பல பெரும் கலைஞர்கள் அரசின்மைவாதிகள் தான். பெரும் சிந்தனையாளர்கள் அரசின்மைவாதிகளே. காந்தியிடம் ஓர் அளவு வரை அரசின்மைவாதம் எப்போதும் உண்டு. ஆகவேதான் அவர் கணிசமானவர்களால் சாத்தியமற்றவைகளைப் பேசும் கிறுக்கர் என்று கருதப்பட்டார். காந்திக்கு அன்று உருவாகி வந்த ஐரோப்பிய அராஜக சிந்தனையாளர்கள் கணிசமானவர்களிடம் நேரடியாக தொடர்பிருந்தது.

எம்.கோவிந்தனை ஓர் அரசின்மைவாதி என்றே நான் மதிப்பிடுவேன். அவரது அவ்வியல்பு பி.கே.பாலகிருஷ்ணனிலும் ஆற்றூர் ரவிவர்மாவிலும் உண்டு. கோவிந்தனும் பாலகிருஷ்ணனும் அதனால் தனிமைப்பட்டு சொந்த நரகங்களுக்குள் சென்று சேர்ந்தனர். ஆற்றூர் அவரது cynicism த்தின் குகைக்குள் சுருண்டுகொண்டு வாழ்கிறார். இந்தியாவில் அவ்வளவுதான் சாத்தியம்

ஆனால் நடராஜகுருவுக்கும், நித்ய சைதன்ய யதிக்கும் அவர்களின் அராஜகவாதத்துடன் வாழ இந்து மதத்துக்குள் இடமிருந்தது. அவரது

அத்தனை நக்கல்களையும் இந்து மனம் ஏற்றுக்கொண்டது. அவரது மாணவரான வினய சைதன்யா போல பரிபூர்ணமான பொறுக்கியை அல்லது உலகப்பொறுக்கியான காரி டேவிஸை அது அனுமதித்தது.

காரணம் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' முதல் 'நாமார்க்கும் குடியல்லோம்' வரை இங்கே இருந்த தத்துவ நிலைதான் இது. இன்றும் நம்முள் வாழும் சித்தர்களின் வாழ்க்கைதான். ஒரு அடையாள அட்டையையோ ஒரு பேருந்தில் பயணச்சீட்டையோ எடுப்பதே தனக்குரியதல்ல என நினைப்பவர்களின் உலகம் ஒன்று நம்மைச்சுற்றியும் உண்டு. அது இந்தியப்பண்பாட்டின் சாராம்சமான ஒரு மெய்நிலை. அதை நம் மனம் மதத்துக்குள் மட்டுமே அனுமதிக்கிறது. 'அவங்கள்லாம் சித்தர்' என்று நாம் கடந்துசெல்கிறோம்.

என் புனைவுலகில் அத்தகைய முழுமையான அரசின்மைவாதக் கதாபாத்திரங்களை படைத்திருக்கிறேன். விஷ்ணுபுரத்தில் சுடுகாட்டுச் சித்தர், கொற்றவையில் நீலி, காடு நாவலில் அய்யர்.

சார்லி ஹெப்டோ ஓர் அரசின்மைவாத இதழ். அதில் கேலிசெய்யப்படாத எதுவுமே இல்லை. இனவாதம் மட்டும் அல்ல இனவாதத்துக்கு எதிரான இலட்சியவாதமும் கேலிசெய்யப்படும். வலதுசாரிகளும் இடதுசாரிகளும் கேலிசெய்யப்படுவார்கள். ஒவ்வொருவரும் தங்கள் மறுதரப்பின் குரலாக அதை முத்திரைகுத்துவார்கள். அது பிரான்ஸின் மதச்சார்பின்மையையும் ஜனநாயகத்தையும் மட்டும் அல்ல அரசின்மைவாதத்தையும்கூட கேலி செய்கிறது

தமிழகத்தில் பலரையும்போல இந்நிகழ்வின் வழியாக நான் இவ்விதழை அறியவில்லை.இந்தியாவில் ஓரளவிலேனும் அரசின்மைவாதத்திற்கும் அதன் முழுஏளன நிலைபாட்டுக்கும் இடமுள்ள மாநிலம் கேரளம்தான். அல்லது தொண்ணூறுகள் வரை இடமிருந்தது. வங்காளிகள் மலையாளிகளை விட அறிவார்ந்த சூழல் கொண்டிருந்தாலும் அங்கே கேலிக்கு இடமே இல்லை — இடதுசாரி மூர்க்கத்தால்.

எண்பதுகளில் கேரளத்தில் பாக்கனார் என்ற இதழ் வெளிவந்தது. முழுக்கமுழுக்க நையாண்டி. இடது, வலது, நடு, குறுக்கு, நெடுக்கு எல்லாரையும் நையாண்டி செய்தது. கேரளத்தின் இரு முக்கியமான கோஷங்களை கலந்துகட்டி அது போட்ட ஒரு கார்ட்டூன் நினைவில்

இருக்கிறது. முன்னால் இருமுடிக்கட்டுடன் ஒருவர் “இங்கிவிலாப்!’ என்று கூவுகிறார். பின்னால் செங்கொடியுடன் ஒருவர் ‘சரணமய்யப்பா” என்கிறார். பல கேலிகள் இடுப்புக்குக் கீழே செல்பவை.

பாக்கனாரின் முள் குத்தியபோது ‘யாரையும் புண்படுத்தாத நகைச்சுவையே உயர்ந்தது’என்பது போன்ற உபதேசங்கள் வெளிவந்தன. அப்போது சார்லி ஹெப்டோ சுட்டிக்காட்டப்பட்டது. ஆனால் பாக்கனார் நின்றுவிட்டது. ஆனால் இன்று பாக்கனாரின் மரபு டிவியில் தொடரத்தான் செய்கிறது.

பாக்கனார் என்ற பெயரையே நல்ல உதாரணமாகச் சொல்லலாம். அவர் கேரளத்தின் 12 சித்தர்களில் ஒருவர். கேரளத்தின் பண்பாட்டு நாயகர்களாகிய இவர்களை பறைச்சி பெற்ற பன்னிருவர் என்பார்கள். வரிசையில் இவர் இரண்டாமர். மலையாளச் சொல் ஒன்று அற்புதமாக இவரைச் சுட்டும், ‘தாந்தோநி’ [தனக்குத் தோன்றியமாதிரி நடப்பவர்]

இரு வகை கதைகள் இவரைப்பற்றி உள்ளன. தத்துவ கனமுள்ள உயர்தரக் கதைகள் ஒருவகை. உதாரணம் அவர் நான்கு அழகான முறங்கள் செய்தார். நான்கு எதற்கு என்றனர் ஊரார். அவர் சொன்னார். ஒன்று ,விற்று கடன்களை அடைப்பதற்காக. இரண்டாவது, விற்று சாமான்களை வாங்கி சாப்பிட. மூன்றாவது, அவருக்கும் மனைவிக்கும் பயன்படுவதற்காக. நான்காவது சும்மா தூக்கி தூரப்போடுவதற்கு.

[வேடிக்கை என்னவென்றால் இந்த முறம் கதை ஒரு சடங்காகவே கேரளத்தில் சில பகவதி ஆலயங்களில் பாக்கனாருக்காகச் செய்யப்படுகிறது. நான்கு முறங்களில் ஒன்று சிரித்துக்கொண்டே தூக்கி வீசப்படும்]

இன்னொரு வகை கதை வாய்மொழி வட்டத்தில் உலவுவது. பாக்கனாருக்கு அருள்புரிய பகவதி முக்கண்ணும் பதினாறு கைகளும் மண்டையோட்டு மாலையுமாக அதிபயங்கர கோலத்தில் எழுந்தருளினாள். ‘அடேய் பக்தா, என்னடா வரம் வேண்டும்?’ என்றாள். ‘இதுவரை நான் சரியான பெண்ணை பார்த்ததில்லை. உன் இடுப்புக்கு சுற்றும் பெண்குறி இருக்கும்படி காட்டு’ என்றார் பாக்கனார். தேவி நாணம் தாளமுடியாமல் ஓடிப்போய்விட்டாள்

[அரைக்கு சுற்றும் பூறு என்பார்கள் இதை நாட்டார் வழக்கில். பூறு என்றால் பெண்குறி. பெண்களுக்கு உண்மையில் அப்படி உண்டு என்றும் ஒன்றுமட்டும்தான் பிறர் கண்ணுக்குத்தெரியும் என்றும் பகவதிக்கு அவை

வெளியே தெரியும் என்றும் கிராமப்புற சொலவடை. சுருக்கமாக கேரளத்தில் acp என்று இது சான்றோரால் சொல்லப்படுகிறது]

பாக்கனார் என்ற பெயரை சூட்டிக்கொண்ட அந்த இதழ் மிகச்சரியாகவே ஒரு தொடக்கத்தை நிகழ்த்தியது. அந்த அளவுக்கு கேரளச் சமூகமேகூட முதிர்ந்திருக்கவில்லை. ஆனால் மலையாள இலக்கியத்தில் வி.கெ.என் போல முழுமுற்றான அராஜக நகைச்சுவையாளர் நிகழ முடிந்திருக்கிறது. விகௌன் போல ஓர் எழுத்தாளர் இருந்தால் உணர்ச்சிப்பிழம்புகளாக எப்போதுமிருக்கும் தமிழர் அடித்தே கொன்றிருப்பார்கள்.

சார்லி ஹெப்டோ நாம் சென்றடையவேண்டிய தொலைவில் இருக்கும் ஓர் இதழ். பிரான்ஸ் அதன் மகத்தான ஜனநாயகப் பரிசோத்னைகள் வழியாக மெல்லமெல்ல அடைந்த ஓர் உச்சம். அதை இங்கே நம்முடைய பின்தங்கிய ஜனநாயகத்தில் இருந்துகொண்டு, அரைப்பழங்குடி மனநிலைகளில் உலவிக்கொண்டு மதிப்பிடுகிறோம். ஆலோசனைகள் சொல்கிறோம்.

சார்லி ஹெப்டோ மீதான தாக்குதல் என்பது மானுடத்தின் பின்தங்கிய பகுதியில் இருந்து மானுடத்தின் உச்சநிலை நோக்கி செய்யப்பட்ட தாக்குதல். இந்தியர்களாகிய நாமும் [ இந்து முஸ்லீம் கிறிஸ்தவர் அனைவரும்தான்] அந்த இருண்டவெளியில்தான் இருந்துகொண்டிருக்கிறோம்

இன்று தங்களை கீழைத்தேயவியலாளர் என்றெல்லாம் சொல்லிக்கொள்ளும் தாரிக் அலி போன்றவர்கள் வகைவகையாக எழுதுகிறார்கள். அடிப்படைவாதத்தை சப்பைக்கட்டு கட்டும் முக்கியமான வார்த்தை ‘ஆனால்’ என்பது. கண்டிக்கிறோம் ஆனால் என்பதைப்போல அயோக்கியத்தனம் வேறில்லை

பிரான்ஸில் ஐம்பது லட்சம் முஸ்லீம்கள் வாழ்கிறார்கள், அவர்கள் புண்படுகிறார்கள் என்பது ஒரு வாதம். அவர்கள் தாங்கள் வாழும் நாட்டின் வரலாற்றையும் பண்பாட்டையும் உணர்ந்துகொண்டு அந்த உயரத்தை அடையவேண்டுமென்பதே நியாயமானது. பிரான்ஸ் தன் இருநூறாண்டுக்கால ஜனநாயகப் பரிசோதனைகள் வழியாக ரத்தமும் கண்ணீரும் சிந்தி அடைந்துள்ள உச்சத்தை இவர்களுக்காக விட்டுக்கொடுக்கவேண்டும் என்பதைப்போல அபத்தமானது ஏதுமில்லை

இன்னும் அசிங்கமான ஒரு கட்டுரை பார்த்தேன். தீவிரவாதத் தாக்குதலில் கொல்லப்பட்ட இஸ்லாமிய காவலர் ஒருவரை புகழ்ந்து அவரது

நம்பிக்கையை சார்லி ஹெப்டோ புண்படுத்தியும் அவர் அவ்விதழின் கருத்துரிமைக்காக உயிர்கொடுத்தார் என்றும் அவர் மட்டுமே 'ஹீரோ' என்றும்.அவர் காவலர், அவ்வேலையைச் செய்தவர், பணியில் கொல்லப்பட்டார். அவருக்கே என்னவென்று தெரிந்திருக்க்காது. அவரை திருவுரு ஆக்கி பிரான்ஸின் மதிப்பீடுகளை இழித்துரைக்கிறார்கள்.

என்னென்ன பசப்புகள் வழியாக நம் சிந்தனை செயல்படுகிறது. நாம் தின்னும் சோறு பெரும்பாலும் இதிலேயே செலவாகிவிடுவதனால்தான் நம்மால் எதையுமே உருப்படியாக செய்யமுடியவில்லை போலும்.

இன்னமும் கூட மதவாரிக் கணக்கெடுப்பு நிகழக்கூடாதென அவர்கள் சொல்வதிலுள்ள பெருந்தன்மை அவர்கள் கொண்டுள்ள ஜனநாயக நம்பிக்கையின் வெளிப்பாடே. காந்தி அதையே சொல்லியிருப்பார். அது ஒருவேளை தற்காலிகச் சிக்கல்களை உருவாக்கலாம். ஆனால் அது noble என்று மட்டுமே சொல்லத்தக்க மனநிலை. அது ஒருபோதும் தோற்காது.

சார்லி ஹெப்டோவுடன் இணைந்து நின்ற ஐரோப்பிய சமூகம் உலகுக்கு ஒரு பெரும் நம்பிக்கையை அளிக்கிறது. பதினேழாம் நூற்றாண்டில் உலகை நோக்கி நவ ஐரோப்பா அளித்த வாக்குறுதிக்கு நிகரான ஒன்று அது

# (2) நைஜீரியா என்னும் அறிவிப்பு

நைஜீரியா : டிரம்புக்கு ஆதரவாக பழங்குடியினர் மேற்கொண்ட பேரணியில் வன்முறை போகிறபோக்கில் தமிழ் ஹிந்து நாளிதழில் இச்செய்தியை வாசித்தேன். இச்செய்திக்கு எந்த வகையான முக்கியத்துவமும் ஒரு பொதுவாசகனின் உள்ளத்தில் தோன்றமுடியாது. ஆனால் இதன் பின்னணி சற்று புரிந்தால் இது அளிக்கும் திறப்புகள் பல.

பையாஃப்ரா குடியரசு என்பது என்ன? நைஜீரியாவும் இந்தியாவும் சமானமான வரலாறு கொண்டவை. நம்மைப்போலவே அவர்களும் பிரிட்டிஷாருக்கு அடிமைப்பட்டிருந்தனர். நாம் 1947ல் சுதந்திரம் அடைந்தோம். நைஜீரியா 1960ல்தான் சுதந்திரம் அடைந்தது. பிரிட்டிஷார் செல்வதற்கு முன் நைஜீரியாவை ஒட்டச்சுரண்டிவிட்டனர்.

1947ல் நாம் பெற்ற சுதந்திரம் வேறுவழியில்லாமல் பிரிட்டிஷார் நம்மை விட்டுச்சென்றதனால் வந்தது என்றும் காந்திக்கோ காங்கிரஸுக்கோ அதில் பங்கேதுமில்லை என்றும் ஒரு கும்பல் இங்கு சொல்லிக்கொண்டிருக்கிறது. அவர்களுக்கு நைஜீரியா மிகச்சிறந்த உதாரணம். உலகப்போருக்குப் பின்னால்தான் தொழில்நுட்பம் மிகப்பெரிய வளர்ச்சி அடைந்தது. கனிவளங்களுக்கான தேவை பெரிய அளவில் அதிகரித்தது. ஆகவே நைஜீரியாவின் மாபெரும் எண்ணைக்கிணறுகள்மேல் முழுமையான ஆதிக்கத்தை பெற்றபின்னர் போதிய அளவில் அடிமைப்படுத்தும் ஒப்பந்தங்கள் போட்டுவிட்டுத்தான் பிரிட்டன் வெளியேறியது.

அந்த ஒப்பந்தங்களால் இன்றும் நைஜீரியா பிரிட்டிஷ், ஐரோப்பிய, அமெரிக்க நிறுவனங்களால் கட்டுப்படுத்தப்படுகிறது. பெருமளவு எண்ணையை உற்பத்திசெய்யும் இந்நாடு இன்னமும் வறுமையின் கீழ்மட்டத்திலேயே உள்ளது. உண்மையில் எண்ணையை எடுப்பதற்கு நிறுவனங்கள் அளிக்கும் உரிமைத்தொகையை அப்படியே அவர்களுக்கு திருப்பி அளித்து தன் உபயோகத்துக்கு சுத்திகரிக்கப்பட்ட எண்ணை வாங்கிக்கொண்டிருக்கிறது நைஜீரியா.

பிரிட்டிஷார் வருவதற்கு முன் நைஜீரியாவில் இருந்தவை பழங்குடி மதங்களும் இஸ்லாமும். பிரிட்டிஷார் பெருமளவு மதமாற்றங்களைச் செய்து

வலுவான ஓர் கிறித்தவச் சிறுபான்மையினரை உருவாக்கினர். நைஜீரியாவின் இக்போ,யோரூபா பழங்குடியினர் பிரிட்டிஷாருக்கு ஆதரவாக இருந்தனர். பிரிட்டிஷார் வெளியேறியபோது அவர்கள் தங்களுக்குத் தனிநாடு வேண்டுமென போராட ஆரம்பித்தனர். அந்த கிறித்தவநாடே பையாஃப்ரா குடியரசு என அழைக்கப்பட்டது

1960 முதல் ஏழாண்டுக்காலம் இந்தக் கிளர்ச்சி நடைபெற்றது. 1967ல் அது உள்நாட்டுப்போராக வெடித்தது. பயங்கரவாதச் செயல்களில் ஏராளமான நைஜீரியத் தலைவர்கள் கொல்லப்பட்டார்கள். கிட்டத்தட்ட இரண்டு லட்சம் பேர் இறந்தனர். பிரிட்டிஷ் மற்றும் ஐரோப்பிய ஆதிக்கத்திலிருந்த, கிறித்தவப் பெரும்பான்மை கொண்ட சில ஆப்ரிக்க நாடுகள் பையாஃப்ராவை ஆதரித்தன. நைஜீரியா மேல் உச்சகட்ட அழுத்தம் விழுந்தது. அது ஐரோப்பா போட்ட எல்லா நிபந்தனைகளையும் ஏற்றுக்கொண்டு எண்ணை வயல்களை அவர்களுக்குத் திறந்து கொடுத்தது. பதிலுக்கு ஆயுதங்களை பெற்றுக்கொண்டு பையாஃப்ரா போராட்டத்தை நசுக்கியது.

1970 ல் பையாஃப்ரா போராட்டம் சரண் அடைந்தது. அதன்பின்னரே நைஜீரியா மெல்ல வளர ஆரம்பித்தது. சென்ற இருபதாண்டுகளாக அது பொருளியல் வளர்ச்சி அடைந்து வருகிறது. எண்ணைவயல்கள் மீதான தன் உரிமைகளைப்பற்றிப் பேச ஆரம்பிக்கிறது. உடனே அதன் ஒருமைப்பாடு மீதான தாக்குதல்கள் ஆரம்பித்தன. பையாஃப்ரா போராட்டம் மீண்டும் தூண்டிவிடப்பட்டது.

எப்படி என்பது மேலும் சுவாரசியமானது. பையாஃப்ரா போராட்டம் பற்றிய ஆய்வுகளை செய்ய அமெரிக்கப் பல்கலைகழகங்கள் நிதிக்கொடைகளை அளித்தன. விளைவாக அப்போராட்டம் பற்றிய ஒற்றைப்படையான சித்திரம் உருவாக்கப்பட்டது. அதைப்பற்றிய செய்திக்கட்டுரைகள் நைஜீரிய இதழ்களில் தொடர்ச்சியாக எழுதப்பட்டன. அதன்பின்னர் அதைச் சித்தரிக்கும் புனைவெழுத்துக்கள் அமெரிக்க ஊடகங்களால் பரப்பப்பட்டன. அவற்றை எழுதியவர்களில் முதன்மையானவர் சிமமெண்டா அடிச்சி.

அடிச்சி நைஜீரியப் பல்கலைக்கழக பேராசிரியர் ஒருவரின் மகள். 19 வயதிலேயே அமெரிக்கப் பல்கலைகளில் கல்விகற்கச் சென்றார். அங்கே

செய்தித் தொடர்பியல், புனைவெழுத்து பயின்றார். பையாஃப்ரா குடியரசு நசுக்கப்பட்டதைப்பற்றிய கொடூரமான சித்திரங்கள் அடங்கிய கதைகளையும் நாடகங்களையும் எழுதலானார். இவை 'மனித உரிமைகளுக்காக வாதாடும்' படைப்புகளாக அமெரிக்க பல்கலைகளாலும் ஊடகங்களாலும் கொண்டாடப்பட்டன.

அடிச்சி தொடர்ச்சியாக பல்கலைகளின் நிதிக்கொடைகள், உயர் விருதுகளைப் பெற்றுக்கொண்டே இருந்தார். அவரை இந்நூற்றாண்டின் மிகப்பெரிய எழுத்தாளர்களில் ஒருவர் என அமெரிக்க விமர்சகர்கள் எழுதினர். ஒரு கீழைநாட்டுப் பொதுவாசகனுக்கு மிகச்சாதாரணமான பிரச்சார எழுத்தாகவே அவை தோன்றும். ஆனால் நாம் சொந்தமாக மதிப்பீடுகளை உருவாக்கிக் கொள்வதில்லை. மேற்கே சொல்லப்படுவனவற்றை அப்படியே ஏற்பதே நம் வழக்கம். ஆகவே தமிழகத்தில்கூட எஸ்.வி.ராஜதுரை போன்ற இடதுசாரிகள் அடிச்சியை மாபெரும் மனிதாபிமானியாகச் சித்தரித்து கட்டுரைகள் எழுதினார்கள். அடிச்சியின் 'இலக்கிய நுட்பங்கள்' பரவசத்துடன் ரசிக்கப்பட்டன

எதிர்பார்த்ததுபோல 2009 முதல் பயாஃப்ரா கிளர்ச்சி மீண்டும் ஆரம்பித்தது. நாடுகடந்த பயாஃப்ரா அரசு உருவாக்கப்பட்டது. அமெரிக்க ஆதரவுடன் தொடர்ச்சியாக கிளர்ச்சி முன்னெடுக்கப்படுகிறது. ஒரு உள்நாட்டுப்போர் நிகழும் என நைஜீரிய அரசை தொடர்ச்சியாக அச்சுறுத்தி நினைத்ததை அடைந்துகொண்டிருக்கின்றன எண்ணை நிறுவனங்கள். நைஜீரியா முழுமையாக பணிந்து அத்தனை கனிவளத்தையும் அளிக்காவிட்டால் அந்நாடு உள்நாட்டுப்போரால் அழிக்கப்படும்.

மிகமிக எளிது இந்தப்போர். இதன் ராணுவமுகாம்கள் அமெரிக்காவின் டிரெக்ஸெல் பல்கலை, ஜான் ஹாப்கின்ஸ் பல்கலை போன்ற கல்விநிறுவனங்கள். இதன் தளபதிகள் சிமெனெண்டா அடிச்சி போன்ற எழுத்தாளர்கள். பத்திரிகைகள் இதன் துருப்புகள். உலகமெங்கும் அறிவுஜீவிகள் என்னும் ஐந்தாம்படையினர்.

இந்தப்பின்னணியில் டிரம்ப்புக்கு ஆதரவாக பையாஃப்ரா போராட்டக்காரர்கள் நிகழ்த்திய பொது ஆர்ப்பாட்டத்தை கண்டால் தமிழ் ஹிந்துவின் அச்செய்தி எப்படிப் பொருள்படுகிறது? கிறித்தவ அடிப்படைவாதம் பேசும் டிரம்ப் பயாஃப்ராப் போராட்டக்காரர்களுக்கு ஆதரவளிக்கிறார். அவர்கள் அவரை தங்கள் தலைவராக அறிவிக்கிறார்கள்.

அந்த கிளர்ச்சி அப்பட்டமான தேசத்துரோகம். ஆனால் அதன்மேல் கண்ணீர்புகை குண்டுகள் வீசப்பட்டதை மாபெரும் அடக்குமுறையாக அமெரிக்க ஊடகங்கள் சித்தரிக்கின்றன. டிரம்ப் நைஜீரிய அதிபருக்கு தனிப்பட்ட முறையில் கடும் எச்சரிக்கையை விடுக்கிறார்!

நைஜீரியா இந்தியாவுக்கு மிகப்பெரிய, முன்னுதாரணமான பாடம்

## (3) காஷ்மீரில் நிகழ்வது

எந்த ஒரு விஷயத்தையும் நாளிதழ்களின் ஒற்றைவரிச்செய்திகள் வழியாகவே அறிந்துகொண்டு அரசியல் முன்முடிவுகளையும் பல்வேறு காழ்ப்புகளையும் கலந்து எழுதும் அரசியலெழுத்தாளர்களையே நாம் பெற்றிருக்கிறோம். எழுதும் விஷயத்தின் பின்புலத்தைப்புரிந்துகொள்வதோ, அதற்கென ஓர் எளியபயணத்தையாவது மேற்கொள்வதோ இங்கே மிக அரிது. இவர்கள் உருவாக்கியளிக்கும் சித்திரங்களை ஒட்டியே நம் சராசரி மனங்கள் தங்கள் அரசியல் பார்வைகளை உருவாக்கிக்கொண்டுள்ளன

காஷ்மீர், வடகிழக்கு அரசியலைப்பற்றி இங்கு முன்வைக்கப்படும் பார்வைகள் மிகமிக உள்நோக்கம் கொண்டவை, பிழையானவை என்பதை நான் எப்போதுமே சொல்லிவந்திருக்கிறேன். அங்குள்ள நடைமுறைக்கும் யதார்த்தத்துக்கும் இவர்கள் உருவாக்கும் சித்திரங்களுக்கும் தொடர்பே இல்லை.

சென்ற சிலமாதங்களுக்கு முன் காஷ்மீர் மாநிலத்தின் முக்கியமான பகுதிகள் அனைத்திலும் விரிவான பயணம் மேற்கொண்டேன். காஷ்மீர் சமவெளியின் பயணிகள் எளிதாகச் செல்லமுடியாத இடங்களுக்கெல்லாம் கூட ஆபத்துகள் நடுவே சென்று பார்த்தோம். அப்பகுதிகளுக்கு நேரில் சென்ற முதல் தமிழ் இதழாளர்கள்- எழுத்தாளர்கள் நாங்களே

அந்த யதார்த்தத்தை விரிவான பயணக்குறிப்பாக அன்றன்றே பதிவுசெய்திருந்தோம். காஷ்மீரின் யதார்த்தத்தை புரிந்துகொள்வதற்கான சுருக்கமான வரைவு இது. நாங்கள் நேரில் கண்டு கேட்டு அறிந்தது

1. காஷ்மீர் மாநிலம் ஒட்டுமொத்தமாகவே இந்தியாவில் இருந்து பிரிய நினைக்கிறது, அதைப்பிரிந்துசெல்ல அனுமதிக்கவேண்டும் என்பது இங்கு முன்வைக்கப்படும் ஐம்பதாண்டுக்கால பிரச்சாரம்.

**உண்மை இதுதான் :** காஷ்மீர் மூன்றுபகுதிகள் கொண்டது . ஜம்மு இந்து பெரும்பான்மை. சீக்கியர்களும் ஷியா முஸ்லீம்களும் கணிசமானவர்கள் உள்ளன. லடாக் பௌத்தர்கள் பெரும்பான்மை. ஷியா முஸ்லீம்கள் அடுத்தபடியாக. காஷ்மீர்பள்ளத்தாக்கில் சுன்னி முஸ்லீம்கள்

பெரும்பான்மை. ஷியாக்களும் சீக்கியர்களும் இந்துக்களும் சிறுபான்மையினராக உள்ளனர்.

இந்துக்கள், ஷியா முஸ்லீம்கள், சீக்கியர்கள், பௌத்தர்கள் ஆகியோர் இந்தியதேசியத்தின் உறுதியான ஆதரவாளர்கள். ஆகவே ஜம்முவும் லடாக்கும் முழுமையாகவே இந்திய தேசிய மனநிலைகொண்டபகுதிகள். பிரிவினை நோக்கு இருப்பது காஷ்மீர் சமவெளியின் சுன்னி முஸ்லீம்களிடம் மட்டுமே

2 காஷ்மீர் சமவெளி பகுதி மக்கள் முழுக்க பிரிவினை நோக்கு கொண்டவர்கள் என இங்கே சொல்லப்படுகிறது

**உண்மை இதுதான்**: காஷ்மீர் சமவெளியிலேயே மூன்று எல்லைப்புற மாவட்டங்களில் அன்றி பிற இடங்களில் பிரிவினைவாத நோக்கே இல்லை. அமைதி திரும்பி வணிகம் வளரவேண்டும் என விழையும் நட்பார்ந்த எளியமக்களே உள்ளனர். அவர்கள் தீவிரவாதத்தை ஏற்பவர்களல்ல, எதிர்க்கும் தைரியம் கொண்டவர்களும் அல்ல.

எல்லைப்புற மக்களில் கூட தீவிரவாத ஆதரவாளர்கள், பிரிவினை நோக்குள்ளவர்கள் மிகச்சிறுபான்மையினரே. மக்கள் தீவிரவாதத்தால் அச்சுறுத்த்ப்பட்டுள்ளனர். பிணைகைதிகள் போல உள்ளூரில் உள்ள ஒருசில தீவிரவாதிகளின் கையில் அஞ்சி நாவடங்கி உள்ளனர்.

மறுபக்கம் அவர்கள் இந்திய ராணுவம் என்ற மாபெரும் அமைப்பின் அன்றாட சோதனைகளால், சடங்கு சம்பிரதாயங்களா, சிவப்புநாடாத்தனத்தால், பொறுமையிழந்தும் உள்ளனர். ராணுவத்தின் தீவிரவாத எதிர்ப்புப்போரின் பலிகளாகவும் ஆக நேர்கிறது. அந்தச்சினம் அவ்வப்போது தீவிரவாதிகளால் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் அவர்கள் பிற இந்திய மாநிலங்களைப்போல வாழவே விழைகிறார்கள்

3. மொத்த முஸ்லீம் சமூகமே இந்தியாவிடமிருந்து பிரியவும் பாகிஸ்தானுடன் இணையவும் விரும்புகிறது என்ற சித்திரம் இங்குள்ளது

**உண்மை இதுதான்:** ஷியாக்கள் சுன்னிகளால் அச்சுறுத்தப்பட்டு தனித்து வாழ்கிறார்கள். தங்களுக்குப் பாதுகாவல் ஈரான் அரசு என நினைத்து வீடெங்கும் அவர் படத்தை வைத்திருக்கிறார்கள். அவர்களே பெருமளவு இந்திய ராணுவத்துக்கு உதவுகிறார்கள். முன்பு அவர்கள் காங்கிரஸ் ஆதரவாளர்கள் . இப்போது கணிசமானவர்கள் பாரதிய ஜனதா

ஆதரவாளர்கள். காரணம், ஐஎஸ்ஐஎஸ் ஷியா முஸ்லீம்கள் மேல் நடத்தி வரும் தாக்குதல்கள். அதற்கு உள்ளூர் சுன்னிகள் காட்டும் ஆதரவு

சுன்னிகளிலேயே,இந்திய ஆதரவாளர்கள், தீவிரவாதப்போக்கு கொண்டவர்களிலேயே காஷ்மீருக்கு மாநில சுயாட்சி தேவை என்று கோருபவர்கள், தனிநாடு கோருபவர்கள், பாகிஸ்தானுடன் சேரவிழைபவர்கள் என பல தரப்பினர் உண்டு. அவர்களிடையே தீராத பூசல் நிகழ்கிறது

4. காஷ்மீர் மக்கள் அவ்வப்போது கடையடைப்பு மூலம் பெரும் போராட்டத்தில் ஈடுபடுகிறார்கள் என செய்தித்தாள்கள் சொல்லிக்கொண்டே இருக்கின்றன

**உண்மை இதுதான்**: இந்தக் கடையடைப்புகள் பெரும்பாலும் கல்வீச்சால் கட்டாயமாக நிகழ்த்தப்படுபவை. ஸ்ரீநகர் தவிர எங்கும் இதனால் இயல்பு வாழ்க்கை பாதிப்படைவதுமில்லை. மக்கள் அக்கறை இல்லாமல் அவர்கள் பாட்டில் இருக்கிறார்கள்.

5.காஷ்மீரில் இந்திய ராணுவம் காஷ்மீரி முஸ்லீம்களை ஒடுக்குகிறது. மக்கள் இன்னல்பட்டு வாடுகிறார்கள். காஷ்மீர் இந்தியாவால் 'ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது' – இச்சித்திரத்தை வாயோரம் நுரை தெறிக்கச் சொல்லாவிட்டால் ஒருவர் இங்கே முற்போக்கே இல்லை

**உண்மை இதுதான்**: அங்கே நிகழ்வது இந்திய ராணுவம்+ அரசு நிர்வாகம்+ குத்தகைதாரர்கள்+ பொதுமக்கள் சேர்ந்து நிகழ்த்தும் ஒரு மாபெரும் கூட்டு ஊழல். அதில் தீவிரவாதிகளுக்கு பங்கு குத்தகைதாரர் வழியாகச் செல்கிறது. இந்த ஊழல்ப்பணமே அங்கு நீடிக்கும் தீவிரவாதம் என்ற மாபெரும் நாடகத்தின் அடிப்படை. ராணுவஅதிகாரிகளும் பிரிவினைவாதத் தலைவர்களும் இந்தியாவெங்கும் பெரும் முதலீடுகள் செய்திருக்கிறார்கள்.

இந்திய அரசு கொண்டு கொட்டும் பணத்தால் காஷ்மீர் சமவெளி செல்வச்செழிப்புடன் உள்ளது. சோம்பலும் ஆடம்பரமுமே எங்கும் தெரிகிறது.மாறாக லடாக்கும் ஜம்முவும் கைவிடப்பட்ட நிலையில் உள்ளன. ஜம்மு தனிமாநிலமாக விரும்புகிறது. லடாக் யூனியன் பிரதேசமாக ஆக்கவேண்டுமென கோரி போராடுகிறது. காஷ்மீர் தங்களை சுரண்டி அழிக்கிறது என அம்மக்கள் நினைக்கிறார்கள்.

அங்கே நிகழ்வது ஒரு ராணுவச் சமரசம். காஷ்மீர் தீவிரவாதிகளுக்கு எதிரான நேரடி நடவடிக்கை நாடெங்கும் இஸ்லாமியரிடம் எதிர்ப்பை உருவாக்குமென்ற அச்சம் இருப்பதனால் எல்லைக்காவலை வலுப்படுத்தி உள்ளூர் முழுக்க ராணுவத்தைக்குவித்து செயற்கை அமைதியை உருவாக்கி வைத்திருக்கிறது இந்தியா.

இந்த ராணுவ வீரர்கள் தொடச்சியாக சிறுவர்களால் கல்லெறித் தாக்குதலுக்கு ஆளாகிறார்கள். அவர்கள் திருப்பித் தாக்க்க தடை உள்ளது. அவர்கள் அவ்வப்போது திருப்பித்தாக்குவதும் கல்லால்தான். அவ்வப்போது ரானுவம் கோபம் கொண்டு எல்லைமீறுகிறது. அது கடுமையான தேசியகண்டனத்துக்கும் வழிவகுக்கிறது.

எல்லைப்புற காஷ்மீரின் பெரும்பாலான கிராமங்கள் முழுமையாகவே பாகிஸ்தான் ஆதரவு பெற்ற மிகச்சில சுன்னி முஸ்லீம் தீவிரவாதிகளின் கட்டுப்பாட்டிலேயே உள்ளன. ராணுவம் அவ்வப்போது உள்ளே சென்று திரும்பலாம். சாலைகள் வழியாக கவச வண்டிகளில் செல்லலாம்- அவ்வளவுதான்

*

காஷ்மீரில் 70 சத வாக்கெடுப்பு என்ற செய்தி வந்தபோது இந்தப் பின்னணியில் அது புரிந்துகொள்ளக்கூடியதே என்று நினைத்தேன்

காஷ்மீர் மக்களில் பெரும்பான்மையினர் இந்தியாவின் இயல்பான குடிமக்களாக உணர்பவர்கள். மிகச்சிலர் எளிய கசப்புகள் கொண்டவர்கள். பிரிவினை வாதம் என்பது பாகிஸ்தானின் ஐந்தாம்படையினரின் உருவாக்கம் மட்டுமே

அதற்குப் பணிந்து அங்குள்ள இந்துக்கள், ஷியாக்கள், அகமதியாக்கள், பௌத்தர்கள் உள்ளிட்ட அனைவரையும் சுன்னி முஸ்லீம் தீவிரவாதிகளிடம் கையளித்துவிடவேண்டும் என வாதிடுபவர்களே இங்கே முற்போக்காளர்களாக ஊடகங்களில் வந்து அமர்ந்திருக்கிறார்கள்.

## (4) காஷ்மீரும் இந்துவும்

அன்புள்ள ஜெ

நேற்று இரவுதான் நீங்கள் காஷ்மீர் பற்றி எழுதியிருந்ததைப் பார்த்தேன். இன்றுகாலையே தி இந்து அளித்திருந்த தலைப்புச்செய்தியை வாசித்து திகைத்தேன். இந்து எதை எழுதும் என்று முன்னரே ஊகித்து எழுதியதுபோல இருந்தது . எல்லாவகையிலும் தந்திரமான செய்தி. மேலோட்டமாகப் பார்த்தால் ஒரு மழுங்கலான ரிப்போர்ட் மாதிரி இருந்தது. ஆனால் உள்ளடக்கம் மூன்று. ஒன்று காஷ்மீரில் உண்மையில் ரிலீஃப் நடவடிக்கை ஏதும் பெரிதாக இல்லை. இரண்டு, அந்த மக்கள் அரசாங்கம் மீது கடுமையான கோபத்தில் இருக்கிறார்கள். மூன்று ராணுவம் ஏதோ கொஞ்சம் பால்பவுடர்களை போட்டிருக்கிறது. ஐந்து அதை ஊடகங்கள் பெரிதுபடுத்தி அவர்களை ஊதிக்காட்டுகின்றன. ஆறு அங்குள்ள மக்கள் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. ஒரே செய்தியில் எத்தனை தந்திரமான பொய்கள். எத்தனை அவதூறுகள். உண்மையிலேயே கேட்கிறேன், இதை ஏன் வெளியிடுகிறார்கள்? அங்கே ராணுவம் எத்தனை பேரை மீட்டிருக்கிறது, எவ்வளவு பணிசெய்திருக்கிறது என்பதெல்லாம் சர்வதேச ஊடகங்களே பதிவுசெய்த ஆவணப்படுத்தப்பட்ட உண்மை. இவர்கள் என்னதான் நினைத்திருக்கிறார்கள்?

நாராயண

அன்புள்ள நாராயணன்,

தி இந்து செய்திகள் இந்தியாவில் வாசிப்பதற்காக எழுதப்படுபவை அல்ல. பெய்ஜிங்கில் வாசிக்கப்படுவதற்காக எழுதப்படுபவை.

நான் சுனாமி மீட்பு நடவடிக்கைகளில் நேரடியாக ஈடுபட்டிருந்தவன். அப்போது கண்ட ஒன்றுண்டு. இயற்கைப்பேரிடர்களின்போது ஒரு ஒட்டுமொத்தமான நிர்வாகக் குழப்பமும், மேலோட்டமான செயலின்மையும் தெரியும்.

பல காரணங்கள். ஒன்று நிர்வாக அமைப்பு சீர்குலைந்திருக்கும். ஏனென்றால் இத்தகைய பேரிடர்களை முன்னால்கண்டு அந்த நிர்வாக அமைப்பு உருவாக்கப்பட்டிருக்காது. அதற்கான நெறிமுறைகளும் இருக்காது. அரசு என்பது முழுக்கமுழுக்க சம்பிரதாயமான ஓர் அமைப்பு

ஆகவே நெருக்கடி நிலைகளில் எங்கிருந்து உத்தரவு பெறுவது எவர் நடவடிக்கை எடுப்பது என்பதெல்லாமே தெளிவற்றதாக சிக்கலாக இருக்கும். சாதாரணநிலையில் சம்பிரதாயமாக வேலைசெய்து பழக்கப்பட்ட அதிகாரிகள் செயலற்று போவார்கள். அந்த இக்கட்டில் சிலர் தங்கள் சொந்த ஆற்றலால் மேலெழுந்து வந்து முன்னால் நின்று பணியாற்றுவார்கள். அவர்களைத் தொடந்து பிறர் செல்வார்கள்.

இந்த குழப்பநிலை தனக்கான செயல்முறையை தானாகவே கண்டுபிடிப்பதைக் காணமுடியும். ஆகவே மேலோட்டமான செயலின்மைக்கு உள்ளே நிர்வாகம் செயல்பட்டுக்கொண்டுதான் இருக்கும். கொஞ்சம் கொஞ்சமாக அச்செயல்பாடு வலுவாகும். அதுதான் சாத்தியம். அமெரிக்காவின் கத்ரினா போன்ற புயல்களில் கூட நிகழ்ந்தது அதுவே. [சொல்லப்போனால் இங்கை விட மோசம்]

இச்சூழல்களில் பாதிக்கப்பட்ட மக்களின் மனநிலைகளை கவனித்திருக்கிறேன். இலக்கற்ற ஒரு ஆங்காரமும் கோபமும் அவர்களிடம் பெருகி நிற்கும். சுனாமி முகாம்களில் நிவாரணசேவைக்கு வந்த தன்னார்வலர்களை வசைபாடுவதையும் அடிக்கவருவதையும் கண்டேன். அதிகாரிகளைக் கண்டதுமே உக்கிரமான சினத்துடன் பாய்ந்து வருவார்கள். தாங்கள் ஒட்டுமொத்தமாக கைவிடப்பட்டிருப்பதாகவே அவர்கள் சொல்வார்கள். அந்த மனநிலையை உளவியல் மொழியில் 'டிப்ரஷன்' எனலாம். அந்த மனச்சோர்வை அவர்கள் பேசிப்பேசி பெருக்கிக்கொள்வார்கள்.

இச்சூழலை ஊடகங்கள் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்வது எளிது. சுனாமி நிவாரணம் ஜெயலலிதா அரசால் வியக்கத்தக்க வகையில் மிகச்சிறப்பாக நடைமுறைப்படுத்தப்பட்டது. உலக அளவிலேயே அது ஒரு பெரும் முன்னுதாரணம். ஆனால் அன்று இங்குள்ள தி.மு.க ஊடகங்கள் 'அரசாங்கம் ஒண்ணுமே பண்ணலீங்க' என்ற குரலை மீள மீள ஒலிக்கவைத்துக்கொண்டே இருந்தன. [அவர்கள் எப்படி அதைச்செய்தார்கள் என்பதை அன்றே நான் பதிவுசெய்திருக்கிறேன்] அதை எவரும் செய்யலாம்.

காஷ்மீரின் ராணுவமும் அரசும் மிகச்சிறப்பாகவே செயல்பட்டுள்ளன என்பது சர்வதேச ஊடகங்களை நோக்கினாலே தெரியும். காஷ்மீர் போன்ற சிக்கலான நில அமைப்புள்ள ஓர் இடத்தில் மீட்பு மற்றும் தங்கவைப்பதற்கான இடர்கள் மிக அதிகம். கண்டிப்பாக சேவைக்குளறுபடிகள் இருக்கும். நிர்வாகத் தேக்கம் இருக்கும். பற்றாக்குறைகள் மிக அதிகமாக இருக்கும். ஆனால் சென்ற உத்தரகண்ட் வெள்ளத்தை நோக்க இப்போதைய பணி மேம்பட்டதாக உள்ளது என்பதே நான் அறிந்தது

ஆனால் இப்போதே தீவிரவாதிகளும் அவர்களுக்கு சாதகமான ஊடகங்களும் பாதிக்கப்பட்டவர்களின் அந்த மனச்சோர்வை, ஏமாற்றத்தை ஊதிப்பெருக்கி காட்டி தங்கள் அரசியலை ஆரம்பித்துவிட்டிருக்கிறார்கள். அதை இந்திய எதிர்ப்பு பிரிவினைவாத அரசியலை நோக்கிக் கொண்டுவருவார்கள். நிவாரணத்துக்கோ சேவைக்கோ ஒரு துரும்பைக்கூட நகர்த்தாதவர்கள் இவர்கள் என்பதை மெல்லமெல்ல அம்மக்களும் மறப்பார்கள். அவர்களை தங்களுக்காக வாதிடுபவர்கள் என மயங்குவர்கள். அதுவே மானுட இயல்பு.

சீனாவுக்கும் பாகிஸ்தானுக்கும் சேவை செய்யும் நம் ஊடகங்கள் எதையும் எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம். காஷ்மீர் மக்கள் இன்னும் நாலைந்து நாட்கள் கழித்து இந்து வகையறாக்களின் இக்குரலை மட்டுமே கேட்கும்படிச் செய்யவைக்கப்படுவார்கள். நம் தேசத்தின் பெரும்சாபம் இவர்கள்.

## (5) வெள்ளநிவாரணத்துக்கு கற்களால் பதில்- காஷ்மீர்

பெருமதிப்பிற்குரிய ஜெமோ அவர்களுக்கு,

வணக்கம்.

ஏற்கனவே காஷ்மீரில் ராணுவத்தின் மீது கல்லெறியும் சம்பவங்களின் பின்னணியில் உள்ள அரசியலைப் பற்றி தங்களின் "இமயச் சாரல்" தொடர் கட்டுரைகளில் விளக்கி இருந்தீர்கள்.ஆனால் தற்சமயம் காஷ்மீர் மாநிலமே வெள்ளத்தால் பாதிக்கப்பட்டு,அதில் சிக்கிய மக்களை ராணுவம் உயிருடன் மீட்க போராடி வரும் நிலையில்,அவர்களை பணி செய்யவிடாமல் இந்த சூழ்நிலையிலும் கல்லெறியும் கயவர்களை பற்றி என்ன நினைக்கிறீர்கள்,இது பற்றி எந்த முற்போக்கு சமூக ஆர்வலர்களோ ,ஊடகங்களோ கண்டு கொள்வதில்லையே ஏன்

அன்புடன்,
அ.சேஷகிரி.

அன்புள்ள சேஷகிரி,

காஷ்மீரின் உண்மை அறிந்த எவரும் எதிர்பார்ப்பதுதான் இது. காஷ்மீர் பிரிவினைவாத போராட்டம் என்பது அங்குள்ள லடாக் ,ஜம்மு தவிர்த்த காஷ்மீர் சமவெளியில் மட்டும், அதன் மூன்று மாவட்டங்களில் உள்ள எல்லையோர ஊர்களில் மட்டும், சுன்னி இஸ்லாமியக் குழுவினரால் எல்லைதாண்டிய ஆதரவுடன் திட்டமிட்டு நிகழ்த்தப்படும் ஓர் அரசியல் சதி.

அவர்களைப் பொறுத்தவரை இந்தியா என்ற எதிரியை அவர்கள் கட்டமைத்து நிறுத்தியாகவேண்டும். அது காஷ்மீருக்காக அல்ல. பாகிஸ்தானை தன் ஆடுகளமாகக் கொண்டிருக்கும் பாகிஸ்தானிய ராணுவத்துக்கும், அந்த ராணுவத்துக்கு மட்டுமே கட்டுப்படும் ஐ.எஸ்.ஐ அமைப்புக்கும் அது தேவைப்படுகிறது. காஷ்மீர் பிரச்சினை இருக்கும் வரைத்தான் பாகிஸ்தான் மக்களிடம் ராணுவத்துக்கு உணர்வுரீதியான ஆதரவு இருக்கும்.

ஏற்கனவே அங்குள்ள மனசாட்சியுள்ள ஒவ்வொருவருக்கும் தெரிந்த உண்மை ஒன்றுண்டு. இந்திய அரசு கொண்டு கொட்டும் பெரும் நிதியுதவியால்தான் காஷ்மீர் சமவெளியில் அவர்கள் வளம் மிக்க வாழ்க்கை வாழ்கிறார்கள். அதை சுவைத்தபடியே இந்திய எதிர்ப்பு பேச அவர்களை தூண்டுவது கண்ணை மறைக்கும் மதவெறி

இன்று ஒரு தேசியப்பேரிடரில் இந்தியப்பெருநிலமும், மத்திய அரசும், ராணுவமும் அவர்களைக் காப்பாற்றும் பெருவல்லமையாக வந்து நின்றிருக்கின்றன. ஒருபோதும் அதை பிரிவினைவாத அரசியலும் மதமௌடீகமும் அனுமதிக்காது. இந்திய அரசுடனும் ராணுவத்துடனும் மக்கள் நல்லெண்ண இணக்கம் கொள்வது அவர்களின் அதிகாரம் தளர்வதற்குச் சமம்

நான் இன்னும் கூட எதிர்பார்க்கிறேன். இப்பேரிடர் முடிந்த பின்னர் இந்தியா முழுக்க பரவியிருக்கும் சுன்னி முஸ்லீம் பிரச்சார அமைப்பும், கஷ்மீரின் தீவிரவாத அமைப்பும் இப்பேரிடர் காலத்தில் இந்திய ராணுவம் செய்த ‘அட்டூழியங்கள்’ ‘வன்கொடுமைகள்’ பற்றிய அவதூறுகளை ஆரம்பிப்பார்கள்.

அதை நாம் உயிர்மையிலும் காலச்சுவடிலும் உயிரெழுத்திலும் ஏன் ஆனந்த விகடனிலும் வாசிப்போம். பின்னர் இங்குள்ள இஸ்லாமியத் தீவிரவாத இதழ்கள் தோறும் மறுபிரசுரமாகவும் மேற்கோளாகவும் பார்ப்போம். இங்குள்ள இடதுசாரி, திராவிடவாதி அரசியல்வாதிகளின் குரல்களில் கேட்போம். கொஞ்சநாளில் அங்கே வெள்ளமே வரவில்லை, கொடுமைகள் இழைப்பதற்காக இந்திய ராணுவம் செய்த நாடகம் அது என்று நம்பப்படும். அந்நம்பிக்கையை மறுபவன் மதவாதி என்று முத்திரைகுத்தப்படுவான்

வேடிக்கை இல்லை. பலமுறை நிகழ்ந்த கதை இது. ஏதேனும் ஒரு காஷ்மீர் நிகழ்ச்சியை எடுத்துக்கொண்டு இணையத்தின் உதவிகொண்டு பத்து வருடம் தொடர்ச்சியாக கவனியுங்கள் அதிர்ச்சியூட்டும் திரிபுகளை, அவதூறுகளைக் காண்பீர்கள்

உதாரணமாக, காஷ்மீரில் அனந்தநாக் மாவட்டத்தில் சிட்டிசிங்புரா என்ற ஊரில் 2000 த்தில் நடந்த சீக்கியர் மீதான தாக்குதல். ஹோலி கொண்டாடிக்கொண்டிருந்த சீக்கிய கிராமம் மீது இந்திய ராணுவ உடையில்

வந்த பாகிஸ்தானிய தீவிரவாதிகள் தாக்குதல் நடத்தி 36 பேரைக் கொன்றனர்.

அப்போது கிளிண்டன் இந்தியா வந்துவிட்டு பாகிஸ்தான் செல்வதாக இருந்தார். அந்தப் பயணத்தை குலைக்கும்பொருட்டு இந்திய ராணுவம் நடத்திய தாக்குதல் அது என அமெரிக்க ஊடகங்கள் சில எழுதின. அதை இங்குள்ள டைம்ஸ் ஆப் இந்தியா, தி இண்டு உள்ளிட்ட இந்திய ஆங்கில ஊடகங்கள் பெரிய அளவில் தலைப்புச்செய்தியாக்கின. அத்தனை இஸ்லாமிய இதழ்களும் அவர்களின் கூலிப்படையும் அதை மீண்டும் மீண்டும் எழுதித்தள்ளினார்கள்.

ஆனால் மெல்லமெல்ல அந்தத் தாக்குதலின் உண்மைகள் வெளிவந்தன. டேவிட் ஹெட்லி 2010ல் கைதுசெய்யப்பட்ட போது அவர் அந்தத் தாக்குதல் எப்படி லஷ்கர் இ தொய்பாவால் திட்டமிடப்பட்டு நடத்தப்பட்டது என்று விளக்கினார். சம்பந்தப்பட்ட அமைப்புகளைச் சேர்ந்தவர்களும் அத்தாக்குதலுக்கு பொறுப்பேற்றுக்கொண்டனர். இன்று உண்மைகள் அப்பட்டமாகிவிட்டன

ஆனால் முதலில் அவதூறைக் கிளப்பிய அமெரிக்க ஊடகங்கள் சம்பிரதாயமான ஒரு மன்னிப்புடன் பேசாமலிருந்து விட்டன. இங்கே அச்செய்தியை மறுபடியும் பிரசுரித்த நாளிதழ்கள் சில அதையும் செய்யவில்லை. இன்றும் இடதுசாரி இதழ்களில், இஸ்லாமிய இதழ்களில் ‘சீக்கியர்களை கூட்டக்கொலை செய்த இந்திய ராணுவம்’ என்னும் செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன

உலக அளவில் இந்த அளவுக்கு அறிவுலகம் கூலிப்படைகளால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கும் இன்னொரு தேசம் இருக்குமென்று தோன்றவில்லை

## (6) சகிப்புத்தன்மையின்மை!

என் வாழ்க்கையில் அதிகாரம் என்றால் என்ன என்று நான் கண்கூடாக அறிந்தது 1994 இல் சம்ஸ்கிருதி சம்மான் விருதுக்காக டெல்லி சென்று அங்கே இந்தியா இண்டர்நேஷனல் செண்டரில் இரண்டு நாள் தங்கியிருந்தபோதுதான். அதற்கு முன்னரே இரு அமைச்சகங்களில் எனக்கு அறிமுகமுண்டு, செய்தித் தொடர்பு துறை மற்றும் கலாச்சாரத்துறை. ஆனால் அதிகாரம் தங்கத் தாம்பாளத்தில் பரிமாறப்பட்டிருப்பதை அங்கேதான் பார்த்தேன்.

பெரிய வளாகத்தினுள் அமைதியான சொகுசான பங்களா. புல்வெளிகள். உயர்தர உணவுகள். குடிவகைகள். ஓசையின்றி வெண்புகைபோல நடமாடும் பரிசாரகர்கள்.மேலுதடு அசையாமல் பேசப்படும் வெண்ணை ஆங்கிலம். நாசூக்காக கூந்தல் திருத்தும் உதட்டுச்சாயப் பெண்களின் நிரந்தரமாக வளைந்த புருவங்கள். ஓசையே இல்லாமல் ஆனால் சைகைகளும் முகபாவனைகளும் உரக்க ஒலிக்க கைவிரித்து கட்டித் தழுவி அளிக்கப்படும் வரவேற்புகள்.

அதன்பின் நான் பல நட்சத்திர விடுதிகளில் தங்கியிருக்கிறேன். ஆனால் இந்தியா இண்டர்நேஷனல் செண்டரின் அந்த ஆடம்பரத்தையும் சொகுசையும் எங்கும் கண்டதில்லை. இந்தியாவில் கலைகளையும், சுதந்திர சிந்தனையையும் வளர்க்கும் பொருட்டு இந்திய அரசின் நிதியுதவியால் உருவான சுதந்திர அமைப்பு அது. அப்போது டாக்டர் கரன்சிங் அதன் தலைவராக இருந்தார் என நினைவு. அவரை அங்கே மாலையில் பார்த்தேன்.

நான் ஆங்கில இதழ்களில் அதுவரை வாசித்தறிந்த அத்தனை முக்கியமான அறிவுஜீவிகளையும் அங்கே பார்த்தேன். யூ.ஆர். அனந்தமூர்த்தி கிட்டத்தட்ட நான்காண்டு காலமாக அங்கே நிரந்தரமாக தங்கியிருந்தார். கிரீஷ் கர்நாட் சிலநாட்களாக தங்கியிருந்தார். பிரீதிஷ் நந்தி போன்ற இதழாளர்கள் மகரந்த் பரஞ்ச்பே போன்ற சிந்தனையாளர்கள். ஷோபா டே போன்ற எழுத்தாளர்கள். எங்குபார்த்தாலும் பெரிய தலைகள்.

அன்று நான் மலைத்துப் போனது உண்மை.கிரிஷ் கர்நாடை கண்டு அருண்மொழி ஓடிப்போய் அறிமுகம் செய்து கொண்டு குதூகலித்தாள்.

நயன்தாரா ஷெகல் தினமும் அங்கே மதுவருந்த வருவதுண்டு, அன்றும் பார்த்தேன். அன்று என்னுடன் சம்ஸ்கிருதி சம்மான் வாங்கிய இருவர், ராஜ்தீப் சர்தேசாய் மற்றும் அனாமிகா ஹக்ஸர் அங்கே வழக்கமாக வருபவர்கள் என்பதை கண்டேன்

முரட்டு கல்கத்தா ஜிப்பாவும் கோலாப்பூர் சப்பலும் அணிந்தவர்கள். குட்டிக்கண்ணாடி போட்டவர்கள். காதி புடவை கட்டி தூவெண் நரை படரவிட்ட பெண்கள். ஒருவர் கபிலா வாத்ஸ்யாயன் என்றார்கள். பபுல் ஜெயகர் வருவார் என்றார்கள். எங்கே பார்த்தாலும் இலக்கியப் பேச்சுக்கள். கலை விவாதங்கள்.

அந்த ஆடம்பரம் என்னை அச்சுறுத்தியது, உயர் அறிவுஜீவித்தனம் அன்னியமாக்கியது. மறுநாள் என்னைக் கண்ட வெங்கட் சாமிநாதன் அதை உடனே ஊகித்துக் கொண்டார். 'யோவ் இதிலே முக்காவாசிப்பேர் சரியான காக்காக் கூட்டம். டெல்லியோட அதிகாரமையங்களை அண்டிப் பொழைக்கிற ஸ்நாப்ஸ். பலபேர் வெறும் பவர் புரோக்கர்கள். நீ மதிக்கிற மாதிரி உண்மையான ஆர்ட்டிஸ்ட் ஒண்ணு ரெண்டு இருக்கலாம். அவனும் இங்க இருந்திட்டிருக்கமாட்டான். ஒடீருவான்”

“இவங்கதான் அத்தனை கல்ச்சுரல் விஷயங்களையும் தீர்மானிக்கிறாங்க. உலகத்தில உள்ள அத்தனை விஷயங்களப் பத்தியும் ஒருமணிநேரம் அழகான ஆங்கிலத்திலே சரியான ஜார்கன் எல்லாம் போட்டு பேசமுடியும். ஆனா அறுபத்தி ஒண்ணாம் நிமிஷம் முதல் சாயம்போக ஆரம்பிச்சிரும். ஒரௌவும் தெரியாது. பெரும்பாலும் பழைய பெருங்காய டப்பா” வெங்கட் சாமிநாதன் சொன்னார்

“அத்தனைபேரும் ஆளுக்கு நாலஞ்சு டிரஸ்ட் வச்சிருப்பாங்க. செர்வீஸ் ஆர்கனைசேஷன் , கல்ச்சுரல் ஆர்கனைசேஷன்னு இருக்கும். கான்ஃபரன்ஸிலே இருந்து கான்ஃபரன்ஸுக்கு பறந்திட்டிருப்பாங்க. கவர்மெண்ட் பங்களாவில ஒரே ஒரு முறை ஒரு நிகழ்ச்சிக்காக தங்க எடம் குடுத்தாப்போரும், கௌப்பவே முடியாது. டெல்லியிலே மட்டும் எப்டியும் அஞ்சாயிரம் பங்களாக்களை ஆக்ரமிச்சு வச்சிட்டிருக்குது இந்தக் கூட்டம்” சாமிநாதன் சொன்னார் “இதே மாதிரி இன்னொரு அதிகார மையம் இருக்கு ஜே.என்.யூ. அங்கியும் இதே கதைதான்”

“கவர்மெண்ட் இவங்களை கௌப்பிவிடமுடியாதா?” என்றேன். “பொதுவா கவர்ன்மெண்ட் அப்டி நினைக்கிறதில்லை. ஏன்னா இந்தக் கூட்டம் நேரு காலம் முதலே வந்து ஒட்டிக்கிட்டது. ஒருத்தரை ஒருத்தர் சப்போர்ட் பண்ணுவாங்க. அப்பப்ப சில ஐ.ஏ.எஸ் காரங்க முயற்சி பண்ணினாலும் அங்க போய் இங்கபோய் காலை கைப்பிடிச்சு கெஞ்சி கூத்தாடி தப்பிச்சிருவாங்க”

“அதோட இன்னொண்ணும் இருக்கு” என வெங்கட் சாமிநாதன் சொன்னார். “இவங்க வெறும் ஒட்டுண்ணிகள் மட்டும் இல்ல. இவங்களுக்கே பெரிய பவர் ஒண்ணு உண்டு. பெரும்பாலானவங்க முற்போக்கு இடதுசாரி ஆளுங்க. பாத்தேல்ல?’ நான் வியந்து “ஆமா” என்றேன்.

“உலகம் முழுக்க செமினார்கள் வழியா அறியப்பட்டவங்க. இந்தியாவிலே எது நடந்தாலும் உலகப் பத்திரிகைக்காரங்க இவங்ககிட்டதான் கேப்பாங்க. காங்கிரஸ் கவர்மெண்டுக்கு ஒரு லெஃப்டிஸ்ட் முகமூடிய உண்டுபண்ணி குடுக்கிறதே இவங்கதான். அப்டிப்பாத்தா இவங்களுக்கு செலவழிக்கிற தொகை ரொம்ப கம்மி” என்றார் வெ.சா “இவங்க இந்தியா மேலே உக்காந்திட்டிருக்கிற வேதாளங்க. யாராலயும் எதுவும் செய்யமுடியாது. இந்தியாவில எது சிந்தனை எது கலைன்னு தீர்மானிக்கிறவங்க”

நான் பலமுறை இந்தியா இண்டர்நேஷனல் செண்டருக்கும் அதைப்போல டெல்லியில் உள்ள நாலைந்து கலாச்சார மையங்களுக்கும் சென்றிருக்கிறேன். மலையாள இதழாளர்களுடன். அவர்களுக்கு வதந்தி பொறுக்கிச் செய்தியாக்க உகந்த இடங்கள் இவை. அந்திக்குப்பின் மது தலைக்கு ஏறும் போது ரகசியங்களே இல்லை

ஆனால் இவர்கள் எழுதித்தள்ளும் ஆங்கில நாளிதழின் நடுப்பக்கக் கட்டுரைகளை அரிய ஞானச்செல்வங்களாக கருதி அவற்றின் அடிப்படையில் அரசியல் பண்பாட்டு விவாதங்கள் செய்பவர்கள் மேல் எப்போதுமே ஒரு பரிதாபம் எனக்குண்டு. உண்மையான அரசியலை ஒருபோதும் அவர்கள் அறிவதில்லை. எளிய பற்று நிலைகளின் அடிப்படையில் முடிவுகள் எடுத்து கூச்சலிட்டுக் கொண்டிருக்கிறார்கள், அவ்வளவுதான்.

முன்பு இதைப்பற்றி எழுதியபோது ஃபர்கா தத் ஒரு பவர் புரோக்கர் அன்றி வேறல்ல என எழுதினேன். என் நண்பர்களே எப்படி அப்படி ஒரு முற்போக்குப்

போராளியைப்பற்றி எழுதலாம் என என்னிடம் சண்டையிட்டனர். நல்லவேளை சில நாட்களிலேயே அந்தம்மாள் டாட்டாவிடம் பேசிய தரகு வேலையின் விவகாரங்கள் நீரா ராடியா டேப் வழியாக வெளிவந்தன.

[என்னாயிற்று அந்த வழக்கு என எவருக்கேனும் தெரியுமா? ஃபர்கா தத்தை அவரது முற்போக்கு பீடத்திலிருந்து ஒரு மாதம் கூட கீழிறக்க அந்த அப்பட்டமான வெளிப்படுத்தல்களால் இயலவில்லை. டெல்லியின் வல்லமை அப்படிப்பட்டது]

சுதந்திர இந்தியாவின் வரலாற்றில் முதல் முறையாக அந்த அதிகார வளையம் மீது கை வைக்கப்பட்டிருக்கிறது. கீழ்மட்டத்தில் இதற்கான எச்சரிக்கைகள் ஆறுமாதமாக அனுப்பப் பட்டிருக்கின்றன. சென்ற வாரம் அமைச்சகம் நோட்டீஸ் அனுப்ப முடிவெடுத்துள்ளது. இந்தியாவில் சகிப்புத்தன்மை சடாரெனக் குறைந்து அறிவுஜீவிகள் கொந்தளித்தெழுந்ததன் உள்விவகாரம் இதுதான் போலும்.

உதாரணமாக நடிகை நந்திதா தாஸின் தந்தை ஓவியர் ஜதீன் தாஸ் டெல்லியின் மிக மிக முக்கியமான பகுதியில் அரசு பங்களாவை பல ஆண்டுக்காலமாக இலவசமாக பயன்படுத்திவருகிறார். அவரை வெளியேற்ற நோட்டீஸ் அனுப்பியிருக்கிறது அரசு. நந்திதா தாஸ் சகிப்புத்தன்மை குறைந்துவருவதாக கொந்தளித்து நாளிதழ்களில் எழுதுவதும் தொலைக்காட்சிகளில் பேசுவதும் வேறெதற்காக? சகிப்புத்தன்மைக்கான தற்கொலைப் படைப் போராட்டம் மேலும் வலுப்பெறவே வாய்ப்பு

மோடி தவறான இடத்தில் கையை வைத்துவிட்டார் என்றே நான் நினைக்கிறேன். உலக மீடியாவில் இந்தியாவை சீரழிக்க இவர்களால் முடியும். இங்கு ரத்த ஆறு ஓடுவதாக ஒரு சித்திரத்தை மிக எளிதாக உருவாக்குவார்கள். தொழில்துறைத் தயக்கங்களை உருவாக்கவும் சுற்றுலாத் துறையை அழிக்கவும் இவர்களால் முடியும். இவர்களுக்கு இந்தியாவில் இன்று மாற்றே இல்லை என்பதே உண்மை. இவர்களை சகித்துக்கொள்வதே இன்று இந்தியாவுக்கு இன்றியமையாதது. மோதியின் சகிப்பின்மை ஆபத்து.

## (7) வெண்டி டானிகரும் இந்தியாவும்

வணக்கம்

தற்போது வென்டி டானிகரின் "இந்துக்கள் :ஒரு மாற்று வரலாறு" (The Hindus : AnAlternative History) என்ற நூலை பெங்குவின் பதிப்பகம்திரும்பபெற்றிருப்பது சரியான முடிவா?உண்மையில் அந்த புத்தகம் காட்டும்
வரலாறு என்ன? மிகுந்த வேலைகளுக்கிடையில் இருக்கிறீர்கள் என அறிவேன். இருந்தும் பதில் கிடைத்தால் நன்றாக இருக்கும் தனி கட்டுரையாக பதிவுசெய்தால் சிறப்பு

செ. நிஜந்தன்

அன்புள்ள நிஜந்தன்,

நான் அந்நூலை வாசிக்கவில்லை. அதைப்பற்றிய ஒரு மதிப்புரையை மட்டுமே வாசித்தேன். அந்நூலை முழுக்க வாசித்துப்பார்க்கும் மனநிலையிலும் இல்லை. மதிப்புரையை வைத்துப் பார்த்தால் அந்த அம்மையார் புதியதாக ஏதும் இந்தியாவைப்பற்றியோ இந்துமதம் பற்றியோ சொல்லிவிடவில்லை. சென்ற நூறாண்டுகளில் இந்தியாவில் உள்ள நவீன யுக எழுத்தாளர்களும் சிந்தனையாளர்களும் இதைவிடத் தீவிரமான, கூர்மையான விமர்சனங்களை வைத்திருக்கிறார்கள். இந்த அம்மையாரே கூட அவ்வகையான ஒரு விரிந்த சொல்லாடல்களனில் இருந்தே தன் விமர்சனங்களை பொறுக்கிக் கொண்டிருக்கிறார்

இங்கே நினைவுகூரவேண்டியது காதரின் மேயோ என்ற அமெரிக்க ஆய்வாளர் 1927ல் எழுதி வெளியிட்ட மதர் இந்தியா என்ற நூல். இந்தியாவை ஓர் அழுகியநாகரீகமாக சகட்டுமேனிக்கு விமர்சிக்கும் அந்நூலை எதிர்த்து அன்று இந்தியாவில் கடும் விமர்சனம் எழுந்தது. காந்தி அந்நூலை சாக்கடை இன்ஸ்பெக்டரின் அறிக்கை என்று சொன்னார்.

அந்த எதிர்ப்பு ஒருவகையில் புதியது. ஏனென்றால் அதே தொனியில் இந்தியாவைப்பற்றி எழுதப்பட்ட நூற்றுக்கணக்கான 'ஆய்வு' நூல்கள்

அதற்கு முன்பு கிறித்தவ மதப்பரப்புநர்களாலும் காலனியாதிக்கவாதிகளாலும் எழுதப்பட்டிருந்தன. பெரும்பாலானவை எந்த வகையான எதிர்ப்பும் இல்லாமல் அவர்களுக்குள் புழங்கிக்கொண்டும் இருந்தன.

மிகச்சிறந்த உதாரணம் என்றால் ராபர்ட் கால்டுவெல் எழுதிய திருநெல்வேலி சாணார் வரலாறு. நாடார் சாதியின் வரலாறு, வாழ்க்கைமுறை பற்றிய அக்கறையோ அடிப்படை மரியாதையோ இல்லாமல் அவர்கள் மதம் மாறாவிட்டால் மிருகங்களே என்ற தோரணையில் எழுதப்பட்ட அந்நூல் பின்னர் புழக்கத்திலேயே இல்லாமலாகிவிட்டது.[ The Tinnevelly Shanars : a sketch of their religion and their moral condition and characteristics : with special reference to the facilities and hindrances to the progress of Christianity amongst them. London : Clay for the Society for the Propagation of the Gospel, 1850.]

இந்தியாவை மேலைநாட்டினர் அணுகுவதில் இரு பார்வைகள் உள்ளன. இந்தியவியலின் அடிப்படை விவாதம் எப்போதுமே இவ்விரு பார்வைகள் நடுவேதான்.

முதல்பார்வை இந்தியாவை மதமாற்றக் களமாக கண்ட பாதிரியார்களால் உருவாக்கப்பட்டு ஐரோப்பிய- அமெரிக்க சூழலில் மிக வலுவாக நிலைநாட்டப்பட்டது. இந்தியா ஒரு வறுமைமிக்க, பிற்பட்ட, அரைக்காட்டுமிராண்டி நாடு. இங்குள்ள பண்பாடு என்பது சில உயர்குடிகளையும் நகரங்களையும் மட்டும் சார்ந்து இருந்த ஒரு போலிப்பாவனை மட்டுமே. இங்குள்ள சிந்தனைகள் கலைகள் அனைத்துமே ஆன்மாவற்றவை, மோசடியானவை. இந்தியப்பண்பாடு தேங்கிநின்றுவிட்ட ஒன்று. இந்தியமக்களை மீட்டு, அவர்களுக்கு பண்பாட்டையும் ஆன்மீகத்தையும் வளர்ச்சியையும் அளிக்க ஐரோப்பாவால் மட்டுமே முடியும். அது வெள்ளைதோல் கொண்டவர்களின் கடமையும் பொறுப்பும் ஆகும்.– இதுவே இவர்களின் நிலைப்பாடாகும்.

நான் சில ஆண்டுகளுக்குமுன் அமெரிக்காவில் பயணம்செய்த நாட்களில் அங்கே மாதாகோயில்களில் வைக்கப்பட்டிருக்கும் நூற்றுக்கணக்கான துண்டுப்பிரசுரங்களில் இந்தியாவைப்பற்றிய இந்தச் சித்திரம் முன்வைக்கப்பட்டு நிதியுதவிக்கான கோரிக்கை எழுப்பப்பட்டிருப்பதை வாசித்தேன். பதினேழாம் நூற்றண்டின் தொடக்கத்தில் முன்வைக்கப்பட்ட இப்பிரச்சாரம் இன்றும் அதே வேகத்தில் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. இந்த

முந்நூறாண்டுப் பிரச்சாரத்தின் வல்லமையை நாம் குறைத்து மதிப்பிட்டுவிடமுடியாது. சராசரியான வெள்ளையன் இந்த மனநிலையையே கொண்டிருக்கிறான், நுட்பமாக வெளிப்படுத்துவான்.

ஐரோப்பியச் சிந்தனையாளர்களில் கணிசமானவர்கள் இந்தமனநிலையை வெளிப்படுத்துவதைக் காணலாம். மிகச்சிறந்த உதாரணம் கார்ல் மார்க்ஸ். அவர் முன்வைத்த ஆசிய உற்பத்திமுறை என்ற கருதுகோள் இந்தியாவில் உற்பத்திமுறை தேங்கிநின்றுவிட்டது என வாதிடுகிறது. வெளிநாட்டினரிடம் வணிகத் தொடர்புடைய நகரங்கள் மட்டுமே இந்தியாவில் வளர்ந்திருந்தன. அங்குமட்டுமே போலியான ஒரு த்த்துவ வளர்ச்சி இருந்தது. மற்றபகுதிகள் பழங்குடிகள் மட்டுமே வாழ்ந்தவையாக இருந்தன என்று மார்க்ஸ் சொல்கிறார். ஆகவே பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவுக்கு ஒரு வரப்பிரசாதம் என்றும் அது இந்தியாவை மீட்கும் வல்லமைகொண்டது என்றும் நினைக்கிறார்

இதே தோரணையை முன்வைக்கும் இன்னொரு சிந்தனையாளர் ஆல்ஃபிரட் ஸூவைட்சர். ஆப்ரிக்காவில் கிறித்தவ மதப்பிரச்சாரகராக அரும்பணியாற்றியமைக்காக புகழ்பெற்ற இவர் இந்திய தத்துவ ஞானமரபை தொகுத்துச் சொல்லி அடிப்படையில் அறவுணர்வற்ற போலியான தத்துவமரபு, பெரும்பாலும் நகல்களால் ஆனது என நிராகரிக்கிறார்

இவ்வாறு நேரடியாகச் சொல்லாவிட்டாலும் இந்தியாவைப்பற்றிப் பேசும் கணிசமான ஆய்வாளர்களிடம் அவர்களின் மேலோட்டமான ஜனநாயகபாவனைகளுக்கு அடியில் இம்மனநிலை இருப்பதை கொஞ்சம் அணுகியதும் காணலாம். பொதுவாக இவ்வகை ஆய்வாளர்கள் தங்கள் கிறித்தவச்சார்பை, வெள்ளை இனச்சார்பை, ஐரோப்பிய மேட்டிமைவாதத்தை நேரடியாகக் காட்டிக்கொள்ளமாட்டார்கள். நாத்திகர்களாக, ஜனநாயகவாதிகளாக, உலகப்பொதுமைபேசும் அறிவியல்நோக்குள்ளவர்களாகவே காட்டிக்கொள்வார்கள். அது ஐரோப்பிய அமெரிக்க அறிவுலகின் பொதுப்பாவனை. ஆனால் பெரும்பாலும் அது ஒரு தற்காப்புப் பாவனை மட்டுமே. விதிவிலக்குகள் மிகமிகமிக அபூர்வம். அந்த அடிப்படைக்காழ்ப்புகளில் இருந்து அங்கே பிறந்து அக்கல்விக்கூடங்களில் கற்ற ஒருவர் வெளியே வருவதும் மிகமிகமிகக் கடினம்.

இந்த மனநிலைக்கு இருவகையான எதிர்வினைகள் இங்கிருந்து எழுகின்றன. இந்தியாவில் கல்வித்துறையில் உள்ள ஐரோப்பிய அடிமை மனநிலை மேற்கண்ட ஐரோப்பிய மேட்டிமை நோக்கை அப்படியே அள்ளி தன் கருத்தாக வைத்துக்கொள்கிறது. அதையே சொல்லிக்கொண்டிருக்கிறது. அமெரிக்க- ஐரோப்பியக் கல்விநிலையங்களில் கற்றவர்கள் அனேகமாக அனைவருமே இந்த மனநிலையைத்தான் 'ஆய்வு நோக்குடன்' சொல்லிக்கொண்டிருப்பார்கள். விதிவிலக்குகளை நான் அதிகம் கண்டதில்லை. எவரேனும் அப்படி எங்கேனும் இருந்தால் நண்பர்கள் எனக்குத் தெரிவிக்கலாம்.

இரண்டாவது எதிர்வினை, ஐரோப்பிய அங்கீகாரத்துக்காக இங்கே எழுதப்படும் எழுத்துக்கள். இவை ஐரோப்பிய ரசனைக்காகவும் அவர்களின் ஆமோதிப்புக்காகவும் எழுதப்படுபவை. அங்கே புகழ்பெற்றபின் அவை இங்கு 'அவர்களாலேயே' அங்கீகரிக்கப்பட்டவை என்ற பேரில் முன்வைக்கப்பட்டு நம்மவர்களாலும் கொண்டாடப்படுகின்றன. மிகச்சிறந்த உதாரணம், நிரத் சௌதுரி என்ற வங்க எழுத்தாளர். காதரீன் மேயோவின் குரலிலேயே எழுதிய இந்திய எழுத்தாளர் இவர். லண்டனில் ஒருகாலத்தில் இந்தியாவைப்பற்றி 'உண்மையாக' எழுதும் ஒரே எழுத்தாளர் என பெரும்புகழ்பெற்றிருந்தார். அவரது நூல்கள் இங்குள்ள ஊடகங்களிலும் பரவலாக புகழ்பெற்றிருந்தன. இன்று அவை மறக்கப்பட்டுவிட்டன

நிரத் சௌதுரியின் வெவ்வேறு வடிவங்களையே நாம் இந்திய ஆங்கில எழுத்துக்களில் திரும்பத்திரும்பக் காண்கிறோம். 'so called' இந்தியப்பண்பாட்டில் சலிப்புற்ற, ஏமாற்றமடைந்த, விலகிச்சென்று ஐரோப்பியப் பண்பாட்டின் மென்மையிலும் மேன்மையிலும் சரண்புகுந்த கதைமாந்தர்கள் கொண்ட கதைகளே புகழ்பெற்ற இந்திய ஆங்கில இலக்கியங்களில் பெரும்பாலானவை. உதாரணமாக ரோகிண்டன் மிஸ்திரி முதல் அருந்ததி ராய், வரையிலானவர்களின் நாவல்களைச் சொல்லலாம்.

இரண்டாவது இந்திய அணுகுமுறை என்பது இந்தியாவின் பண்பாடு மீதான அடிப்படை ஆர்வத்துடன் நிகழ்த்தப்படுவது. அதற்கான காரணங்கள் பல இருக்கலாம். ஆரம்பகால இந்தியவியலாளர்களுக்கு ஆரிய இனவாத நோக்கு இருந்தது என்கிறார்கள்.ஆனால் இந்தியசிந்தனையை புரிந்துகொள்ள, இந்தியப்பண்பாட்டை உள்வாங்கிக்கொள்ள முயல்வதனாலேயே அவை முக்கியமானவை. மோனியர் விலியம்ஸ் முதல்

ஏல்.எல்.பாஷாம் வரை உதாரணமாகச் சொல்லலாம். அவர்களுக்கு இந்தியா கடன்பட்டுள்ளது

8

வெண்டியின் இந்நூல் ஒன்றும் புதிய தாக்குதல் அல்ல. அது ஐரோப்பிய மேட்டிமைநோக்கின் குரலாக சென்ற முந்நூறாண்டுகளாக இந்தியா, சீனா, ஆப்ரிக்கா மீது முன்வைக்கப்பட்டுக்கொண்டேதான் இருக்கிறது.இந்தியாவின் பண்பாட்டு அடையாளமாக எந்த ஆளுமை முன்வைக்கப்பட்டாலும் உடனடியாக இந்த ஐரோப்பிய அறிவுத்தளத்தால் அந்த ஆளுமை சிறுமைப்படுத்தப்படும். காந்தி, அரவிந்தர், விவேகானந்தர், ஜெ.கிருஷ்ணமூர்த்தி ஆகியோரைப்பற்றி மிகக்கீழ்த்தரமான நூல்கள் பல எழுதப்பட்டுள்ளன. அவை வெறும் சிலையுடைப்புகள் அல்ல, அவதூறுகள்.

இணைய அறிமுகம் உடையவர்கள் சென்ற ஓரிரு வருடங்களுக்குள்ளேயே இத்தகைய நூல்கள் சில பரபரப்பாக பேசப்பட்டு மறக்கப்பட்டதை நினைவுகூரலாம். காந்திக்கும் அவரது நண்பருக்கும் ஓரினச்சேர்க்கை உறவு இருந்தது என்று அவரது கடிதங்களில் இருந்து 'கண்டுபிடித்து' எழுதப்பட்டது. விவேகானந்தரும் ராமகிருஷ்ணபரம ஹம்ஸரும் ஓரினச்சேர்க்கை உறவுள்ளவர்கள் என ஒருவர் ஆய்வுசெய்து எழுதினார்

இராமனைப்பற்றியும் கிருஷ்ணனைப்பற்றியும் ஏராளமான நூல்கள் இங்கே எழுதப்பட்டுள்ளன.இந்தியப்புராணங்கள், இந்திய தெய்வங்கள் பற்றி எழுதப்படுகின்றன. ஏன்? இவற்றின் பெறுமதி உண்மையில் என்ன?

ஒப்ரி மேனன் என்ற எழுத்தாளர் திருவனந்தபுரத்தில் இருந்தார். அவர் பி.கெ.பாலகிருஷ்ணனின் நண்பர். அன்று உலகப்புகழ்பெற்ற ஆங்கில எழுத்தாளராக இருந்தார் ஒப்ரி மேனன். தாய் வழியில் ஐரிஷ்காரர் தந்தைவழியில் மலையாளி. அவரது ராமாயண மறுஆக்கம் நூல் இந்தியாவில் தடைசெய்யப்பட்டிருந்தது. [The Ramayana, As Told by Aubrey Menen (1954)] அவரை 1987ல் பி.கெ.பாலகிருஷ்ணனுடன் சென்று சந்தித்தபோது அதைப்பற்றி நான் கேட்டேன்.

'இந்தியாவில் தடைசெய்யப்படுவதற்காக எழுதப்பட்ட நாவல் அது. ஏராளமாக பணம் கிடைத்தது. என் பிறநூல்களுக்கு கவனமும் பெற்றுத்தந்தது' என்றார் ஒப்ரி. அதை அவர் எழுதியதன் நோக்கமென்ன என்று மீண்டும் கேட்டேன். 'அதைத்தானே சொன்னேன்' என்று சிரித்தார்.

அந்நூலை தடைசெய்திருக்கக் கூடாது என நான் ஒரு கட்டுரை எழுதினேன், ஒரு வணிகத்தை ஏன் தடைசெய்யவேண்டும்? அதனால் என்ன ஆகிவிடப்போகிறது?

இது தொடர்ந்து நிகழ்ந்துகொண்டேதான் இருக்கும். இதற்கு அதிக எதிர்வினையாற்றுவதும் தடைசெய்வதும் சரியல்ல என்பதே என் எண்ணம். முதலில், இன்றைய இணையச்சூழலில் தடை என்பது மறைமுக விளம்பரம் மட்டுமே. **அடிப்படையில் நூல்களை தடைசெய்யும் அதிகாரம் அரசுகளுக்கு அளிக்கப்படக்கூடாது. எந்நூலையும் எக்காரணத்தாலும் தடைசெய்யக்கூடாது**

மேலும் வெண்டியின் இந்நூலை தடைசெய்தால் அதைப்போல எழுதப்பட்ட பலநூறு நூல்களை என்ன செய்வது? 1979ல் கீதாமேத்தா என்பவர் எழுதிய கர்மகோலா என்ற நூல் இதேபோல ஒட்டுமொத்தமாக இந்திய ஆன்மீகத்தை கேவலப்படுத்துகிறது என்றார்கள். அது என்ன விளைவை உருவாக்கியது? வெண்டியின் நூலைப்பற்றிய மதிப்புரையை வைத்துப்பார்த்தால் நல்லெண்ணத்துடன் எழுதப்பட்ட ஒரு நூலாக அது தெரியவில்லை.இன, மத காழ்ப்புடன் எழுதப்பட்ட சர்வசாதாரணமான நூலுக்கு அதற்குத் தகுதியற்ற விளம்பரத்தை அளிப்பதனால் என்ன பயன்? இத்தகைய காழ்ப்புகளால் சீண்டப்படுவதா இந்துப்பண்பாடு?

ஆகவே இந்த மிகையான எதிர்வினைகள்தான் இந்தியப்பண்பாட்டுக்கும், இந்துப்பண்பாட்டுக்கும் எதிரானவை என நினைக்கிறேன். இந்தியப்பண்பாடும் இந்துமதமும் கீழ்த்தரமானவை என சித்தரிப்பவர்கள் இந்த மிகையுணர்ச்சிமிக்க எதிர்வினைகளைத்தான் பயன்படுத்திக்கொள்கிறார்கள்.

இந்நூல்களை இந்து, இந்திய பண்பாட்டுமரபில் ஞானம் கொண்டவர்கள் புன்னகையுடன் கடந்துசெல்லும்போது தெருவில் இறங்கும் ஏதுமறியாத கும்பல் தங்களை இந்து- இந்திய பிரதிநிதிகளாக முன்வைக்கிறது. ஐரோப்பிய மேட்டிமையாளர்களுக்கு மேலும் வசதியானதாக ஆகிறது. பண்பாட்டுத்தாக்குதல்களுக்கும், வணிகத்துக்கும்

இந்த தாக்குதல்களை உண்மையில் எதிர்கொள்ளும் வழிகள் இரண்டுதான்.முதல் வழி சிந்தனையின் தளத்தில். அந்தசெயல்பாடுகளுக்கு

இந்திய கல்வித்துறை முற்றிலும் தகுதியற்றதாக ஆகிவிட்ட நிலையில் வெளியே இருந்து வலுவான அறிவார்ந்த குரல்கள் எழவேண்டியிருக்கிறது.

இன்னொரு வழி உண்டு. இருபதாண்டுகளுக்கு முன்புவரை சீனா ஐரோப்பாவால் நம்மைவிட அதிகமாக வசைபாடப்பட்டு அவதூறுசெய்யப்பட்டு இழிவுபடுத்தப்பட்டது. அதன் நாகரீகமும் பண்பாடும் ஐரோப்பாவால் சிறுமையாகவே பேசப்பட்டன. இன்று அது உலக வல்லரசு. இன்று ஐரோப்பா அதை பணிவுடன் மரியாதையுடன் கௌரவத்துடன் பேசத்தொடங்கியிருக்கிறது.

# (8) மங்கள்யான்

1988 ல் ராஜீவ்காந்தியின் தொழில்நுட்ப ஆலோசகராகப் பதவியேற்று இந்திய தொலைதொடர்புத்துறையை நவீனப்படுத்தும் முயற்சியை ஆரம்பித்திருந்தார். நான் தற்காலிக ஊழியராகத் தொலைபேசித்துறையில் பணியாற்றிவந்தேன்.

அன்று தொலைத்தொடர்பை நவீனப்படுத்துவதற்காக கோடிக்கணக்கான ரூபாய் ராஜீவ் அரசால் ஒதுக்கப்பட்டது. வழக்கம்போல அதற்கு இடதுசாரிகளிடமிருந்து கடுமையான எதிர்ப்பு கிளம்பியது. கோடிக்கணக்கான மக்கள் பட்டினி கிடக்கும் தேசத்தில் பணக்காரர்கள் தொலைபேசியில் பேசிக் களிக்க பணம் வீணடிக்கப்படுகிறது என்று இடதுசாரிகள் பிரச்சாரம் செய்தார்கள். உண்மையில் அன்று தொலைபேசி என்பது பணக்காரர்கள் மட்டுமே வைத்திருக்கும் ஒரு கருவி. நான் தொலைபேசித்துறையில் வேலைக்குச் சேரும்போது இரண்டுமுறைதான் தொலைபேசியில் பேசியிருந்தேன். கார், தொலைபேசி இரண்டும் அந்தஸ்தின் சின்னங்கள் மட்டுமே.

காரணம் அன்று தொலைபேசி மிகமிக செலவேறியது.நாகர்கோயிலில் இருந்து வள்ளியூருக்குப் பேச மூன்று நிமிடங்களுக்கு சாதாரணக் கட்டணம் நான்கு ரூபாய். அவசர அழைப்பு என்றால் எட்டு ரூபாய். மின்னல்வேக அழைப்பு என்றால் 32 ரூபாய். அன்று ஒரு இடைநிலை தொலைபேசி ஊழியரின் அடிப்படைச் சம்பளம் மாதம் 450 ரூ என்பதை வைத்துப்பார்த்தால் நான்கு ரூபாயை இன்றைய கணக்கில் முப்பது மடங்காகக் கணக்கிடவேண்டும். அதாவது 120 ரூபாய். இன்று எல்லா அழைப்புகளும் மின்னல்வேக அழைப்புகள்தான். அப்படிப்பார்த்தால் 960 ரூபாய். இன்று அதே அழைப்புக்கு 45 பைசா செலவாகும். அதாவது கிட்டத்தட்ட இரண்டாயிரம் மடங்கு மலிவு! நினைத்தே பார்க்கமுடியவில்லை.

அன்று இந்தியாவெங்கும் கோடானுகோடிபேர் பட்டினி கிடந்தார்கள் என்பதும் உண்மையே.நான் எண்பதுகளில் இந்தியாவெங்கும் அலைந்த காலகட்டத்தில் தமிழர்கள் கேரளத்துக்கும் பெங்களூருக்கும் கூலிவேலைக்கு கூட்டம்கூட்டமாகச் சென்றுகொண்டிருந்தார்கள். இந்தியாவில் எங்கு

பயணம்செய்தாலும் ஒருவேளை உணவுகூட இல்லாத பட்டினிப்பட்டாளங்களைக் காணமுடியும். சிறு நகரமுனைகளில்கூட கூலிவேலைசெய்ய வாய்ப்பு கோரி நூற்றுக்கணக்கானவர்கள் காத்து நிற்பார்கள். மேஸ்திரிகள் வந்து மாடு தரம் பார்ப்பதுபோல ஒவ்வொருவரையாகத் தட்டிபபர்த்து கால்வாசிப்பேரை கூட்டிச்செல்ல மிச்சம்பேர் மனம் உடைந்து அமர்ந்திருப்பார்கள். பல்லாயிரக்கணக்கான் கை ரிக்ஷாக்கள் துருப்பிடித்த சைக்கிள் ரிக்ஷாக்கள் நகரங்களில் கூடிக்கிடந்தன. பயணிகளை மொய்த்துக்கொண்டு 'ஐம்பது பைசா சாப்! முப்பது பைசா சாப்' என கெஞ்சிக்கூச்சலிட்டன.

தொலைபேசித்துறையில் தினமொன்றுக்கு நான்கு ரூபாய் கூலிக்கு குழிவெட்டும் வேலைக்கு இருபதுபேர் தேவை என்றால் முந்நூறுபேர் வந்து விடிகாலையிலேயே காத்துக்கிடப்பார்கள். ஆகவே அன்று இடதுசாரித் தொழிற்சங்கத்தில் செயல்பட்டு வந்த எனக்கு அவர்கள் சொன்னது சரி என்றே பட்டது. நாங்கள் மத்தியஅரசின் மக்கள்விரோத , ஊதாரித் திட்டங்களை எதிர்த்து நடத்திய இருபதுகிலோமீட்டர் பாதயாத்திரையில் நான் ஆவேசமாக முன்னால் நின்று கோஷமிட்டேன். 'கஞ்சி கேட்கும் ஜனங்களுக்கு கம்பி தருகிற சர்க்காரே, மறக்காது மறக்காது எங்கள் தலைமுறைகள் மறக்காது' என்ற நான் எழுதிய கோஷம் அன்று பிரபலமாக இருந்தது

சாம் பிட்ரோடா அப்போது ஒரு மாநாட்டுக்காக கோழிக்கோடுக்கு வந்தார். அதில் அவர் எதிர்காலத்தில் என்ன நடக்கும் என்று சொன்னார். 'ஒட்டுமொத்தமாக ஒரே பெரிய முதலீடுதான் இதில் உள்ளது. திட்டமிட்டு அதைச் செய்தால் இந்தியாவின் குன்றுகளில் நிலைநாட்டப்படும் கோபுரங்கள் வழியாக ஒட்டுமொத்த இந்தியாவையே ஒரே தொலைத்தொடர்புவலையில் இணைத்துவிடலாம். அதன்பின் தொலைபேசிக்கட்டணம் குறைய ஆரம்பிக்கும். மீன் விற்பவரும் கீரை விற்பவரும் கையில் ஒரு கம்பியில்லா தொலைபேசியை வைத்திருப்பார்கள். அதைக்கொண்டு ஒருநாளுக்கு ஐந்துமணிநேரம் அவர்கள் பேசினாலும் இன்று ஒரு அழைப்புக்கு ஆகும் செலவுகூட ஆகாது'

அவர் செங்கல் அளவிருந்த ஒரு கருவியை காட்டி 'இதைக்கொண்டு பஸ்சில் போனபடியே பேசமுடியும்' என்றார் அவர் சொல்லிக்கொண்டிருக்கவே அரங்கில் சிரிப்பொலி நிறைந்தது. நாங்கள் கடும் கோபத்துடன் 'வெட்கம்

வெட்கம்!' என்று கூச்சலிட்டோம். அன்றெல்லாம் தொலைபேசியில் பேச ஒலிவாங்கியை எடுத்துக் காதில் வைத்துக் காத்திருக்கவேண்டும். ஊழியர் மறுமுனையில் வந்து கேட்பார். அழைப்பை பதிவுசெய்துவிட்டு தொலைபேசி அருகிலேயே காத்திருக்கவேண்டும். ஊழியர் அந்த எண்ணை அழைத்தபின் நம்மைஅழைத்து இணைப்பை அளிப்பார்.நாகர்கோயில் வள்ளியூர் அழைப்புக்கு சாதாரணமாக ஒருமணிநேரம் ஆகும். வெளிமாநில இணைப்புக்கு முழுநாளும் ஆகும்.

சாம் தொடர்ந்தார் 'அந்தக் கம்பியில்லா தொலைபேசி மக்களின் வணிகத்தைப்பெருக்கும். வேலைகள் அதிகரிக்கும். இளைஞர்களுக்கு தகவல்தொழில்நுட்பத்துறையில் பல லட்சம் வேலைவாய்ப்புகள் உருவாகும்....வறுமை நீங்கும். பட்டினி அகலும்' சிரிப்பு சினமாக மாறியது. ஊளைகள் கூச்சல்கள். நாங்கள் வெளியேறி வெளியே நின்று 'சாம் பிட்ரோடா திரும்பிப்போ' என்று கூச்சலிட்டோம். நவீனமயமாக்கலால் எங்களில் பாதிப்பேருக்கு வேலைபோகும் என்ற அச்சம் அடிபப்டை உணர்ச்சியாக இருந்தது.

1989 டிசம்பரில் வி பி சிங் அமைச்சரவை வந்து தகவல்தொடர்புத்துறை அமைச்சராக இடதுசாரிகளின் அமைச்சர் கே.பி.உண்ணிகிருஷ்ணன் பதவியேற்றதும் பிட்ரோடா அவமதிக்கப்பட்டு வெளியேற்றப்பட்டார். அப்போது நாங்கள் துள்ளிக்குதித்து இனிப்பு வழங்கிக் கொண்டாடினோம்.

நாங்கள் எதிர்த்தாலும் தொடர் மாற்றங்கள் நிகழ்ந்தபடியே இருந்தன. எதையும் அன்று ஊகிக்கவே முடியவில்லை. டியானன் மைன் சதுக்கத்தில் 1989ல் நிகழ்ந்த படுகொலைகள் சீனா முதலாளித்துவம் நோக்கி வலுவான அடியெடுத்துவைப்பதை தெளிவாக்கின. 1991ல் சோவியத் யூனியன் உடைந்தது கனவிலும் நினைக்காத வரலாற்று நிகழ்வு. உடைந்து ஆறுமாதமாகியும்கூட ஏதோ நிகழ்ந்து எல்லாம் சரியாகிவிடுமென நம்பியவர்கள் பலர் இருந்தனர், நானும்தான்

அதன்பின் உலகமயமாக்கம், சுதந்திர வணிகம் ஆரம்பித்தது. இந்தியத்தெருக்களில் அம்பாசிடர்களும் ஃபியட்டுகளும் மட்டும் ஓடிய காலம் மறைந்தது. ஒரு 'செவன் ஓ கிளாக் பிளேடு'க்காக வெளிநாடு சென்று மீண்ட நண்பனைச்சென்று பார்க்கும் காலகட்டம் நினைவாக மாறியது. வேலை என்றாலே அரசுவேலைதான் என்ற நிலை அகன்றது. அரசுவேலைக்கு

இருந்த முக்கியத்துவமே மறைந்தது.முக்கியமாக சேவைத்துறையில் பெரும் மாற்றம்.

நான் 2000த்தில் இந்தியப்பயணம் மேற்கொள்ளும்போது முதன்மையாகக் கவனித்த ஒன்று இந்தியாவின் வறுமை பெருமளவுக்கு விலகியிருக்கிறது என்பதையே. எண்பதுகளில் இருந்த கடுமையான உணவுப்பஞ்சம் அகன்றிருந்தது. பிகார், மேற்குவங்கம் தவிர எங்குமே கொடூரமான வறுமையைக் காணமுடியவில்லை. நகரங்கள் வளர்ந்தன. கிராமங்களில்கூட உயர்தரக் கல்விக்கூடங்கள் வந்தன. அடித்தளமக்கள்கூட நம்பிக்கையுடன் கல்வியை நோக்கி வந்தார்கள். கிராமங்களில் ஓலைகுடிசைகள் கண்ணெதிரே இல்லாமலாகிக்கொண்டிருப்பதைக் கண்டேன். ஓரளவு வசதியான அடித்தளக்குடியிருப்புகள் உருவாகி வந்தன. கிராமங்களில் டிவிஎஸ் 50 சாதாரணமாக தென்பட்டது.

தென்மாநிலங்கள், குறிப்பாக ஆந்திரா பெரும் எழுச்சி பெற்றதை தொடர்ந்து பார்த்துக்கொண்டிருந்தேன். குஜராத் மகாராஷ்டிரா மாநிலங்களின் வளர்ச்சி ஏற்கனவே ஆரம்பித்திருந்ததுதான். 2008 இல் பயணம் செல்லும்போது மத்தியப்பிரதேசமும் ராஜஸ்தானும்கூட வளர்ச்சியை நோக்கி வர ஆரம்பித்திருந்தன. 2012இல் ஒரிசா வளர்ச்சியின் பாதையில் வந்திருப்பதை, கிராமப்புற வறுமை மறைந்திருப்பதைக் கண்டேன். அந்த வளர்ச்சிக்கு தகவல்தொழில்நுட்பத்தில் நிகழ்ந்த பாய்ச்சல் முக்கியமான காரணம். பின்னர் தாராளமயமாக்கம் நிகழ்ந்தபோது அதை சாதகமாக பயன்படுத்திக்கொள்ள நம்மை தயார்படுத்தி வைத்தது சாம் பிட்ரோடாவின் தகவல்தொழில்நுட்பப்புரட்சிதான். நேருவின் சோஷலிசமும், இந்திரா காந்தியின் கரீபி கடாவோ கோஷமும் செய்யாததை தொழில்நுட்பம் செய்தது என்றே நான் நினைக்கிறேன்

நான் நவீனத் தொழில்நுட்பத்தின் கண்மூடித்தனமான ஆதரவாளனல்ல. அதன்மேல் ஐயம் கொண்டவன். ஆனால் முதலாளித்துவப் பொருளியலை ஏற்றுக்கொண்டபின் நவீனத் தொழில்நுட்பத்தை வெளியே நிறுத்துவதென்பது அசட்டுத்தனம் என்றே நினைக்கிறேன். நவீனத்தொழில்நுட்பம் பட்டினியை அகற்றுமென்றால் அகற்றட்டுமே என்றுதான் பட்டினியைக் கண்டவன் என்றமுறையில் என்னால் சொல்லமுடிகிறது.

வறுமை ஒழிப்புக்கு வேறு வழி இல்லையா? உண்டு. அது காந்தியப்பொருளியல் என்றே நான் நம்புகிறேன். இந்த நவீனத்தொழில்நுட்ப வளர்ச்சியால் கிராமங்கள் கைவிடப்பட்டு வேளாண்மை அழிகிறது. இது சமச்சீரான வளர்ச்சி அல்ல. இந்நிலையைத் தவிர்க்க காந்தியவழி மட்டுமே உள்ளது. ஆனால் அது ஒட்டுமொத்தமான மாற்றம் வழியாகவே சாத்தியம். பொருளியல்-நிர்வாகம் இரு தளத்திலும் அடிப்படையான மாற்றம் தேவை அதற்கு. இன்றைய சூழலில் நவீனத்தொழில்நுட்பத்தைச் சாராமல் வேறுவழியில்லை.

நான் பொருளியல் கட்டுரைகளை தொடர்ந்து வாசிப்பவன் என்றாலும் கருத்துரைக்கும் தகுதிகொண்டவன் அல்ல. என் கருத்து குடிமகனாக, முன்னாள் தொழிற்சங்க ஊழியனாக மட்டுமே.ஆகவே புள்ளிவிவரங்கள், கொள்கைகள் ஆகியவை சார்ந்த விவாதத்திற்கு நானில்லை. நான் சொல்வது என் சொந்த அனுபவம் சார்ந்த அவதானிப்பை மட்டுமே. அதுவே என்னை முடிவெடுகக்ச் செய்கிறது.

தமிழில் இதுபற்றி பத்ரி சேஷாத்ரியின் கட்டுரையையே எனக்கு உவப்பான குரலாகக் காண்கிறேன் மங்கள்யான் இந்தியத் தொழில்நுட்பத்தின் ஒரு பதாகை. நாம் தொழில்நுட்பத்துறையில் வளர்ந்திருக்கிறோம் என்பதை மட்டுமல்லாது சர்வதேசத்தரத்தை வைத்துப்பார்த்தால் அடிமட்டச் செலவில் நம்மால் உயர்தொழில்நுட்பத்தைச் சாதிக்கமுடிகிறது என்பதற்கும் அடையாளம். அதற்கான செலவு இந்தியாவில் ஒரு மாநில ஊழலில் அழியும் பணத்தின் துளிகூட இல்லை. ஒட்டுமொத்தமாக இதன்மூலம் நமக்குக் கிடைப்பது நன்மையே.

ஆகவேதான் இன்று மங்கள்யான் திட்டம் பற்றி இடதுசாரிகள் எழுப்பும் கோஷங்களை அவநம்பிக்கையுடன் மட்டுமே பார்க்கிறேன். அதே கோஷம், அதே வரிகள். யார்கண்டது, கேரளத்தில் அன்று நான் எழுதிய கோஷங்களையே கூட இடதுசாரிகள் இப்போதும் முழங்கிக்கொண்டிருக்கலாம் இடதுசாரிகளுக்கு ஒரு வாய்ப்பு

# (9) வடகிழக்கும் பர்மாவும்

நான் பிரிவினைவாதம் இருந்த நாட்களில் மேகாலயா, மணிப்பூர், நாகாலாந்து சென்றிருக்கிறேன். அங்கு சில இதழாளர்களின் தொடர்பு உண்டு. பலமுக்கியமானவர்களிடம் தனிப்பட்டமுறையில் பேசியிருக்கிறேன். என் கருத்துக்கள் அவற்றின் அடிப்படையிலானவை. இக்கட்டுரையில் சாதாரணமாகக் கிடைக்கும் நேரடித்தகவல்களை மட்டும் கொண்டு என்ன நடக்கிறது என்று ஒரு எளிய வரைபடத்தை அளிக்கிறேன்.

வடகிழக்கின் அனைத்துப் பிரிவினை இயக்கங்களும் பர்மாவை முதன்மையாகவும் அன்றைய வங்கதேசத்தை அடுத்தபடியாகவும் தளமாகக்கொண்டு வெளிப்படையாகவே செயல்பட்டவைதான். அவற்றுக்கு பர்மிய ராணுவச் சர்வாதிகார அரசு ஆயுதமும் பணமும் கொடுத்து ஊக்குவித்தது. இணையத்தில் சாதாரணமாக அவற்றின் அதிகாரபூர்வ வரலாற்றைப் பார்த்தாலே தெரியும் செய்திகள் இவை.

அரைநூற்றாண்டுக்காலம் பல கட்டங்களிலாக வடகிழக்குப்பகுதிகளை எந்தவிதமான வளர்ச்சியும் இல்லாமல் தேக்கநிலையில் வைத்திருந்தவை இந்தப் பிரிவினை இயக்கங்கள். அவற்றின் உருவாக்கம், அவற்றின் இனவாதக் கொள்கைகள், அவற்றுக்கிடையே உள்ள போர்கள் பற்றியெல்லாம் நேர்மையுடன் எழுதப்பட்ட எழுத்துக்கள் அனேகமாக இல்லை. ஆனால் நேர்மாறாக இந்தியஅரசையும் ராணுவத்தையும் சற்றும் மனசாட்சியில்லாமல் கீழ்த்தரமாகச் சித்தரித்து எழுதப்பட்ட நூற்றுக்கணக்கான பக்கங்களை இங்கே நாம் வாசிக்கமுடியும்.

அதற்கான காரணங்கள் பல. முதலில் இந்தப் பிரிவினை இயக்கங்களுக்கு அடித்தளமாக அமைபவை அப்பகுதியில் செயல்படும் வெவ்வேறு அரசுசாரா தன்னார்வ நிறுவனங்களும் பலவகை கிறித்தவ மதஅமைப்புகளும். சென்ற காலங்களில் இந்திய அரசு அவற்றில் பலவற்றின் மேல் வெளிபப்டையாக சர்வதேச அரங்குகளில் குற்றம்சாட்டியிருக்கிறது. பலவற்றை தடைசெய்யவும் பல அன்னியநாட்டினரை நாடுகடத்தவும் செய்திருக்கிறது. ஆனால் முறையான முழுமையான நடவடிக்கையை இந்தியாவால் எடுக்கமுடியாது. காரணம் அந்த அமைப்புகள் அமெரிககா மற்றும் ஐரோப்பியநாடுகளின் ஆதரவு கொண்டவை. அங்குள்ள கிறித்தவ சமூகம்

அவற்றை சேவை அமைப்புகளாக எண்ணுகிறது. அப்படி நம்பவைக்கப்பட்டிருக்கிறது. ஐரோப்பா அமெரிக்காவை மீறி இந்தியா போன்ற பலவீனமான தேசம் எதையும் செய்யமுடியாது.

இந்தத் தன்னார்வ-மத அமைப்புகளின் நோக்கம் தெளிவானது. அவை மதப்போர்வையில் செயல்படும் அரசியல் அமைப்புகள் மட்டுமே. வடகிழக்கில் ஒரு கிறித்தவதேசத்தை உருவாக்கிவிடமுடியுமென்ற நம்பிக்கை ஐரோப்பிய ஆதிக்க சக்திகளிடம் எண்பதுகளில் சர்வதேசசூழ்நிலை மாறுவது வரை இருந்தது. ஆகவே மதப்போர்வையில் இவை உருவாக்கப்பட்டன. உலகமெங்கும் அத்தகைய முயற்சிகள் அன்று நடந்தன. அவற்றில் கோசோவா முயற்சி 1999-இல் வெற்றிபெற்றது. கோசாவோவில் இருந்த பெரும்பாலும் அனைத்து மசூதிகளும் ஒரே வருடத்தில் அழிக்கப்பட்டு கோசோவோ ஐரோப்பிய ஆசியுடன் 'மக்கள் குடியரசாக' மலர்ந்தது.

நைஜீரியாவை கூறுபோட்டு கிறித்தவ நாடான பயாஃப்ராவை உருவாக்குவதற்குச் செய்யப்பட்ட முயற்சிகள் 1967-70-இல் நடந்த உள்நாட்டுப்போர்மூலம் முடிவுக்கு வந்தன. ஆனால் சமீபகாலமாக பயாஃப்ரா குடியரசை மீண்டும் உருவாக்குவதற்கான முயற்சிகள் சூடுபிடித்துள்ளன. பயாஃப்ரா போராட்டத்தில் இஸ்லாமியர்களால் கிறித்தவர்கள் மீது நடத்தப்பட்ட கொடுமைகளை மிகைப்படுத்தி எழுதப்பட்ட போலிநாவலான சிமொண்டா அடிச்சியின் Half of a Yellow Sun-ஐ அமெரிக்காவும் ஐரோப்பாவும் ஒரு பெரும் செவ்வியலாக்கமாக கொண்டாடி உலகு முன் வைத்தது ஒரு தொடக்கம். அது ஒரு பெரிய அரசியல் சதியின் ஆரம்பம் என இன்றைய நிகழ்ச்சிகள் காட்டுகின்றன. [அதை அந்நாவல் கொண்டாடப்படும்போதே நான் சுட்டிக்காட்டி எழுதியிருந்தேன் – இன்னும் சில வருடங்களில் பயாஃப்ரா கோரிக்கை மீண்டும் எழும் என்று]

இந்தியாவெங்கும் உள்ள தன்னார்வக்குழுவினர் வடகிழக்குப்பிரச்சினையை அவர்களுக்குரிய வகையில் முழுமையாகவே திரித்து அப்பட்டமான இந்திய எதிர்ப்புப்பிரச்சாரமாகவே முன்னெடுக்கிறார்கள். அவர்களால் விலைக்குவாங்கப்பட்டவர்கள் அதை ஊடகங்களில் முன்வைக்கிறார்கள். மிகச்சில அசடுகள் இந்தப்பிரச்சாரங்களை அப்படியே நம்பி திருப்பிச் சொல்கிறார்கள்.

தங்களை இடதுசாரிகள் என்றும் புரட்சியாளர்கள் என்றும் நம்ப விரும்பும் சிலர் அப்பிரச்சாரத்தில் இணைந்துகொள்கிறார்கள். அவர்களுக்கு அது ஒரு பிம்பத்தை அளிக்கிறது. கடைசியாக இந்தியாவிலுள்ள பிற பிரிவினைப்போக்காளர்கள் அதை வழிமொழிகிறார்கள் – இவ்வாறு திரண்டுவந்துள்ள ஒற்றைப்படையான பிரச்சாரகோஷங்களை மட்டுமே நாம் வடகிழக்கைப்பற்றிய அறிதல்களாகக் கொண்டிருக்கிறோம். மிக எளியமுறையில்கூட நாம் தகவல்களை சரிபார்ப்பதில்லை. உண்மையைப்பற்றிய அக்கறை எவரிடமும் இல்லை. நம் பிம்பங்களும் அரசியல்சரிகளுமே நமக்கு முக்கியம்.

வடகிழக்குப் போராட்டத்தைப்பற்றி விரிவாக எழுத இப்போது அவகாசம் இல்லை. அதில் தெளிவாக நாம் அறியவேண்டியவை இரண்டு. ஒன்று, அப்போராட்டங்கள் எந்த வகையான முற்போக்கான ஜனநாயக எண்ணங்களின் அடிப்படையிலும் எழுந்தவை அல்ல. மிகப்பழைமையான இனவாத நோக்கு கொண்டவை. பழங்குடிகளின் இனக்குழு சார்ந்த விரோதங்களே அவற்றை இயக்குகின்றன. அவ்வியக்கங்கள் ஒவ்வொன்றும் இந்திய அரசைவிட எதிரியாக எண்ணுவது அவர்கள் அருகே வாழும் பிற இனக்குழுக்களைத்தான். அவர்கள் ஒருவரை ஒருவர் சென்றகாலத்தில் கொன்றொழித்துள்ளனர். மாறி மாறி பல்லாயிரக்கணக்கில் அடித்துத் துரத்தியிருக்கின்றனர் .

ஒவ்வொரு குழு போட்டிருக்கும் தங்கள் தேசத்துக்கான வரைபடத்திலும் பிற குழுக்களின் நிலங்களும் அடங்கும். ஒரு தகவலுக்காக போடோக்கள் போட்டிருக்கும் போடோலேண்ட் மற்றும் நாகாக்களின் நாகாலேண்டின் பகுதிகளை மட்டும் சோதனையிட்டுப் பாருங்கள். சென்றகாலங்களில் இவர்களை ஒன்றாகச்சேர்த்து ஒரு கிறித்தவநாட்டை உருவாக்கிவிடலாமென கனவுகண்ட தன்னார்வக்குழு – மதமாற்றக்குழுக்கள் அந்நம்பிக்கைகளை இழந்தமைக்குக் காரணம் இந்த இனப்பூசல்தான்.

இவர்களின் போராட்டத்தை காங்கோ, கென்யா முதலிய ஆப்ரிக்க நாடுகளில் நிகழும் இனக்குழுப்போர்களுடன் மட்டுமே ஒப்பிட முடியும். அவை சுதந்திரப்போராட்டங்களோ உரிமைப்போர்களோ அல்ல. என் நிலத்தில் என் இனம் மட்டுமே வாழ அனுமதிப்பேன் என்ற பழங்குடிவெறி மட்டுமே அது.

இதோ இன்றுகூட 'சுதந்திரப்போராளிகளான' போடோக்கள் சக பழங்குடிகளை கைக்குழந்தைகளுடன் சேர்த்து சுட்டுத்தள்ளிய செய்திகள் வந்துள்ளன. இதுதான் அங்கு தொடர்ந்து நடந்து வருகிறது. தாங்கள் உரிமைகொண்டாடும் நிலங்களில் இருந்து பிற இனத்தவரை மிரட்டி துரத்துவதே நோக்கம். இங்கே ஓர் அரசு என்னசெய்யவேண்டும்? அங்குள்ள சிறுபான்மை இனத்தவரை பாதுகாக்கவேண்டும். அங்குள்ள வன்முறைக்குழுக்களை ஒடுக்கவேண்டும். அவர்களின் ஆதரவாளார்களை அடக்கவேண்டும். அதைச்செய்யும் இந்திய ராணுவத்தைத்தான் இங்கே இருந்துகொண்டு கூலிப்படைக்கும்பல் ஆதிக்க ராணுவம் என்று முத்திரைகுத்திக்கொண்டிருக்கிறது.

இந்த இனக்குழுப்பூசல்கள் தொடங்கியதுமே இதில் பர்மாவும் வங்கமும் குளிர்காயத் தொடங்கின. இந்திய அரசை பலவகையிலும் நிர்பந்தம் செய்து பலவகை பொருளியல் லாபங்களை அடைய ஐரோப்பாவும் அமெரிக்காவும் இவற்றைப் பயன்படுத்திக்கொண்டன. விளைவாக இங்கே வாழ்க்கை தேங்கியது. தீவிரவாத அச்சுறுத்தல் முதலில் சாலைப்போக்குவரத்தை அழிக்கிறது. பின்னர் சந்தைகளை அழிக்கிறது. கடைசியாக முதலீடே நிகழாத நிலையை உருவாக்குகிறது.

இன்று இந்தியாமுழுக்க ஓட்டல்களில் பணியாற்றும் மணிப்பூர் இளைஞர்கள் தீவிரவாதம் உருவாக்கிய பொருளியல் அழிவின் பலிகள்தான். அவர்கள் எவரிடமாவது கொஞ்சநேரம் பேசினால் அவர்களின் ஊரில் சென்ற ஐம்பதாண்டுகளில் என்ன நடந்தது என்று எளிதில் தெரிந்துகொள்ளலாம்.

இன்று வடகிழக்குத் தீவிரவாதம் பெருமளவுக்கு இல்லாமலாகிவிட்டது. எண்பதுகளில் நடந்த போடோ-நாகா கலவரங்களுக்குப்பின் ஒரு கிறித்தவநாடு உருவாகுமென்ற நம்பிக்கையை ஐரோப்பிய நிதியுதவி அமைப்புகள் இழந்தன. ஐரோப்பாவே பெரும் நிதிச்சிக்கலை நோக்கிச் சென்றது. ராஜீவ்காந்தி அந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ள உண்மையான முயற்சிகளை எடுத்தார். லால்டெங்கா போன்றவர்களை பர்மாவிலிருந்து வரவழைத்து பேச்சுவார்த்தைகள் மூலம் ஜனநாயகப்பாதைக்குக் கொண்டுவந்தார்.

அத்துடன் வெட்கக்கேடான ஒன்றையும் இந்திய அரசு செய்தது. இந்திய அரசு அதுவரை பர்மாவின் அனைத்து ஜனநாயக மக்கள் போராட்டங்களையும் ஆதரித்துவந்தது. ஒரேநாளில் அங்குள்ள சர்வாதிகார அரசை ஆதரிக்கத்

தொடங்கியது. உலகிலேயே மிகமோசமான சர்வாதிகார அரசின் பிரதிநிதிகளுடன் இந்தியா கைகுலுக்கி நட்பு பாராட்டியது. அது நரசிம்மராவின் கொள்கை என்று அழைக்கப்படுகிறது.

பதிலுக்கு 2002 முதல் அவர்கள் தங்கள் நிலத்தில் இருந்த தீவிரவாதக்குழுக்களை கைதுசெய்தனர். 2004-இல் பர்மிய ராணுவம் தங்கள் நிலத்தில் தங்களால் பேணிவளர்க்கப்பட்ட அனைத்து இந்தியப்பிரிவினைவாத – தீவிரவாத முகாம்கள் மீதும் குண்டுமழை பொழிந்து அழித்தது. வலிமையுடன் இருந்த உல்ஃபா போன்ற பல குழுக்கள் அதில் முழுமையாகவே அழிந்தன. அத்துடன் வடகிழக்கில் அமைதி திரும்பத் தொடங்கியது.

இன்று அங்கே மெதுவாக பொருளியல் வளர்ச்சி உருவாகி வருகிறது. முதலில் அங்குள்ள இளைஞர்கள் இந்தியா முழுக்க சென்று பணியாற்றத்தொடங்கியதன் விளைவாக அவ்வளர்ச்சி பிறந்தது. அந்தப்பணம் மெல்ல முதலீடுகளாக ஆவதன் வழியாக கண்கூடான மாற்றம் தென்படுகிறது.

சென்ற சிலநாட்களுக்கு முன் வந்த செய்தி ஒன்று மிகமிக முக்கியமானது. பிரதமர் மன்மோகன் சிங் வடகிழக்குப்பகுதிகளுக்கான ரயில்வே திட்டத்தை திறந்துவைத்திருக்கிறார். 2014 ஏப்ரல் 7-ஆம் தேதி அருணாச்சலபிரதேசத்தின் இடாநகருக்கு முதல் பயணியர் ரயில் பத்து பயணிகளுடன் சென்று சேர்ந்திருக்கிறது. சிலவருடங்களில் அனைத்து வடகிழக்கு மாநிலங்களுக்கும் ரயில் பாதைகள் அமைக்கப்படும் என்று தெரிகிறது. வடகிழக்கின் பொருளியல் முழுமையாகவே மாறவிருக்கிறது.

வடகிழக்கின் அரசியல் முழுக்க முழுக்க பர்மாவுடனான உறவைச் சார்ந்துதான் உள்ளது. இப்போது அங்கே பர்மிய ராணுவ ஆட்சியின் ஆதரவுடன் முஸ்லீம்களுக்கு எதிரான பழங்குடிகளின் கலவரங்கள் நடக்கின்றன அவர்களில் பலர் இந்தியாவுக்குள் அகதிகளாக வந்து கொண்டிருக்கிறார்கள். இந்தியாவின் நிலை பர்மிய அரசுக்கு ஆதரவானதாகவே உள்ளது. அகதிகள் வரும் செய்தியைக்கூட பதிவுசெய்யாமல் பார்த்துக்கொள்கிறார்கள். வடகிழக்கை மீண்டும் பணயம் வைக்க இந்தியா விரும்பவில்லை. நடந்தது ஒரு ஆதிக்கப்போர். போலிஅறிவுஜீவிகள் அதன் கூலிப்படைகள். மக்கள் வழக்கம்போல பிணைக்கைதிகள்.